உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" But, "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star.** **"To Thine Own Self be True.**




**அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.]** உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம். 16.] 1907-ம் ௵ செப்டம்பர் ௴. [சஞ்சிகை 5.

An Appeal to Our Subscribers.—

The Viveka Chintamani Publishing Committee repuest all subscribers to remit their subscriptions to the Viveka Chintamani without delay and to kindly help them increase their subscription list by new addittions to it from among their friends and acquaintances.

நமது சந்தாதாரர்களான நேசர்கள் அவரவர்கள் சந்தாத்தொகையை யனுப்புவதோடு புது சந்தாதாரர்களை யும்சேர்த்தனுப்பி யுதவவேண்டுமாய் விவேகசிந்தாமணி கமிட்டியார் அவர்களை விநயமாய்க் கேட்டுக்கொள் கிறார்கள்.

# A NOVEL WITH A PURPOSE.

## உண்மையுரைக்குமோர் உத்தமக்கதை.

சென்ற சஞ்சிகையோடு பாரதீமாதாவின் படமொன்று அழகாக அச்சிட்டு நமது கையொப்பக்காரர்கள் எல்லோருக்கும் அனுப்பினோம். அந்த பாரதீமாதா படத்தின் பக்கத்தில் ஸம்ஸ்கிருகத்தில் "வந்தே மாதரம்" என்று தொடங்கும் இந்தியா மாதின் ஸ்தோத்திரம் ஒன்று வரைந்திருக்கக்காணலாம். அது மலைபரையன் மகளாகிப பார்வதிதேவியின் க்ஷேத்ரஸ்வரூபமாகிய இந்தியாவைத் தாய்ஸ்தானத்தில் வைத்து மகன் தொழும் பாவனையாக எழுதப்பட்ட ஒரு ஸ்தோத்திரம். அது பங்கிம் சந்திர சட்டர்ஜியென்னும் வங்காள மஹான் எழுதிய "ஆனந்தமடம்" என்னும் ஓர் உத்தமக் கதையில்வரும் ஸ்தோத்திரப்பதிகத்தில் ஒன்று. "வந்தேமாதரம்" என்று இப்பொழுது இமாசலம் முதல் கன்னியாகுமரிவரை

யில் எங்கும் எழும்கோஷம் பங்கிம் சந்திர சட்டர்ஜியவர்கள் தம் ஸ்வகற்பனையால் உண்டு பண்ணினதல்ல. அத்தலைப்பின்கீழ் வரைந்துள்ள ஸ்தோத்திரங்கள் அவருடையதானாலும் "வந்தே மாதரம்" என்னும் "அபயக்குரல்" அவருடையதல்ல. பார்வதிதேவியார் மலையரையன் மகளாக அவதரித்து விளங்கிய காலத்தில் அவர் கங்கையில் நீராடித் தவம்புரியச்செல்லுங்காலத்தில், அசுரர்கள் கொடுமையால் நொந்துருகி நைந்துபோன தேவர்கள்குழாம், லோகமாதாவாம் அந்த உமாதேவியைக்கண்டு, அபயக்குரலிட்டு ஆர்வமுடன் ஸ்தோத்திரங்கள் செய்து தாயே காக்கவேண்டுமென்று செய்துகொண்ட விண்ணப்ப ஸ்லோகங்களின் கடைசியில் எல்லோரும் ஏகோபித்து "வந்தே மாதாரம்" என்று முறையிட்டதோர் முறையீடு. அதன் கருப்பொருளை மனத்திருத்தி பங்கிம் சந்திர சட்டர்ஜியவர்கள் அவர் எழுதிய கதையின் சந்தர்ப்பங்களுக்கேற்ப "வந்தேமாதரம்" எனும் தலைப்பின் கீழ் சில ஸ்தோத்திரங்களைச் செய்தார். இந்த ஸ்தோத்திரங்களின் மொழிபெயர்ப்பை முன்னொருமுறை விவேகசிந்தாமணியில் பிரசுரத்திருக்கிறோமாதலால் இப்பொழுதும் வெளியிடவேண்டிய நிமித்தமில்லை.

முற்காலத்தில் தேவர்கள் அபயக்குரலுக்கிரங்கி தேவியூர் அவர்கள் விண்ணப்பத்தைக்கேட்டு அதையுணர்ந்து அவர்களைக் காப்பான் புருவத்தை நெறிக்க, நெற்றிக் கண்ணினின்றும் ஒரு பொறி விழுந்தாற்போலும் சண்டி யென்னும் துர்க்காதேவி குதித்தாளென்று தேவி மஹாத்மியத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைக் காணலாம்.

"ஏகைவசக்திபரமேசுவரஸ்யப் பிரயோஜனார்த்தாய சதுர்விதாபூத்
போகேபவானி, புருஷேஷ-விஷ்ணு, குரோதேசகாளி சமரேசதுர்க்கா."—

என்றபடி, தேவர்களைக்காக்கும்படி சமர்புரியும் சாமர்த்தியமே சக்தியுருவாக்கொண்டமைந்த துர்க்காதேவியின் உற்பத்திக்குக் காரணமாயிருந்தது தேவர்களின் அபயக்குரலான "வந்தே மாதரம்" என்னும் அழகிய திருமந்திரமாதலால், ஜனங்கள் பொதுவாகப் பீதியடைந்துவருந்துங்காலத்தில் எல்லோரும் "வந்தே மாதரம்" என்னும் சரணாகதி மந்திரத்தைத் திரிகரணசுத்தியாகத் தியானித்து ஏகோபித்துக் கோஷித்தால் மனதிற்குத் திடமுண்டாகி உள்ளத்தில் தைரியம் குடிகொள்ளவும், அது மூலமாய் பீதிநிவாரண முண்டாகவும் காரணமாகும். இது எத்தாலும் உண்மையே யாதலால், எக்காலத்தும் கைவிடாது கொள்ளத்தக்கதோர் தத்துவக்கொள்கையாம். இதையனுசரித்து இக்காலத்துக்கேற்ப "சிதக்னிகுண்டஸம்பூதை" யான ஸ்ரீதேவியை "பாரதீ மாதா"வாகத் தியானம் செய்து தியேயாகாரமான அவசரத்தில், உள்ளே அந்தர்முகத்தில் அந்தர்-யஜ்ஞம்செய்து தன்னைக்கொடுத்ததுபோல், பஹிர்முகத்தில் பஹிர்-யஜ்ஞஞ் செய்து தன் நாட்டைக்கொடுத்து ஸ்ரீதேவியின் அருளைப்பெற்று அவள் திருவருள் நீழலால் மூடப்பெற்ற இந்தியாவானது கஷ்டங்கள்தீர்ந்து, கர்மங்கள் தொலைந்து "தொல் சீர்மை" யடையவேண்டுமென்று கூப்பினகையுடன் சதா தொழுதவண்ணமிருக்கும் யோகியின் அந்தக்கரணவுண்மையை யோகஸம்யமத்திலுணர்ந்தபடி "பாரதீ மதா திருப்பள்ளியெழுச்சி" அல்லது, "துரியாம்பாள் துரியஞான பூஜை"—என்னும் தலைப்பின்கீழ் "ஆரோஹண-அவரோஹண-ஸம்பூர்ண பூர்வகமாய்" ஆத்மைகபாவத்திலிருந்து "பாரதீ மாதா"வின் திருவுருவப்படத்தை யுள்ளபடி அகமுகத்தேயிருந்து உண்மைப் பூஜை

செய்த ஒருவர்தம்அனுபவத்தை இச்சஞ்சிகையில் அப்படத்தோடும் மற்றோரிடத்தில் பிரசுரித்திருக்கிறோம். இங்கே சொல்லவந்தது என்னவென்றால், பங்கிம் சந்திர சட்டர்ஜியவர்கள், 1772-ம்வருஷத்தில் நடந்த ஸந்நியாசிகள் கலகத்தைப்பற்றி யெழுதமுயன்றதில் சரித்திர சம்மதமாக நடந்த விஷயங்களை ஆதாரமாகவைத்துக்கொண்டு, எந்தக்காரியத்திலும் ஜயமடைவது ஆத்மபுத்தியே யன்றி தேஹபுத்தியல்ல வென்பதை வெகு நன்றாகவும்அழகாகவும் காட்டியிருக்கிறார். "ஆத்மபுத்தி" யென்பது ஆத்மாவோடு ஒன்றுபட்டு அதன் அருள்-வெளியில் பிரகாசிக்கும் புத்தி.—"தேஹபுத்தி" என்றால், ஆத்மப்பிரகாசம் ஆவரணசக்தியால் மறைபட்ட இருளில் மருள் கொண்டு "தேஹம் நான்" என்று தேஹத்தோடு ஐக்கியப்பட்டு தேஹதர்மத்தையொட்டி நடக்கும் புத்தி.

"ஆனந்தமடம்" என்ற உண்மையுரைக்கும் உத்தமக்கதையில், ஸந்நியாசிகள் கூட்டத்துக்குத்தலைவராயும் அவர்களில் முக்கியஸ்தர்களாயு மிருந்தவர்கள் பேர்களைக் கொண்டு "நாமதாரணையால்" உண்மையையுணர்ந்தால், எல்லாப்போர்களும் பாரதப்போரைப்போல், தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் உண்டாகும் சண்டையன்றிவேறல்லவென்று விளங்கும். சித்ரூபமாயுள்ளது எதுவோ அதுவே சாசுவதமான தர்மஸ்வரூபமானது. "தர்மாம்பிகை" யென்னும் பேர்கொண்டது அதுவே. அசித்ரூப பூதாத்மனாயிருந்து பிறப்பிறப்புக்குள்ளாகி, நினைப்பு மறப்பு ரூபமாய் மின்மினியின் ஒளிபோல் அற்பவாழ்வுற்று அழிவது எதுவோ அதுவே "அதர்மஸ்வரூப" பிரேதாத்ம-ஜடசக்தியாம். இது தூக்கத்தைப்போலவும், புகையைப்போலவும் அழியும் ஸ்வபாவமுள்ளதும் நிலையில்லாததுமான சுகத்தைக்கொடுப்பதால் இதை "அபரசக்தி"="தாழ்ந்தசக்தி," யென்றும், "நீலாதேவி" யென்றும், "தூமா தேவி"யென்றும் உருவகமாக யோகிகள் தியானம்செய்வார்கள். ஆனந்தமடத்தின் அதிபர்பேர் "ஸத்யானந்தர்". இவருக்கு முக்குணம்போலவும், முச்சக்திகள்போலவுமிருந்துதவியவர் "பாவாநந்தர்," "தீரானந்தர்", "ஜீவானந்தர்" என்னுமிவர்களாம். இவர்களோடு இவர்களுக்கு உபபலமாய்மேற்குறித்த சக்திஸ்வரூபமாயிருந்துதவிய மாதர்கள் இருவருண்டு. அவர்கள் ஜீவானந்தரின் பத்னியாகிய "நவீனானந்தா". இவள் அபின்ன சக்திபோலும் தன் கணவரைவிட்டுப் பிரியாதவராய் புருஷவேஷம் பூண்டு அவருடன்கூடவிருந்து ஸந்நியாசதர்மத்தையாசிரயித்து அதிதீரமான செய்கைகளைச்செய்தார். மாயா ஸ்வரூபியான "பின்னசக்தி"யின் அவதாரமாகக் "கலியாணி" யென்பவள் உத்தமபத்னியாக விருந்து ஸ்திரீதர்மம் தவறாது தன்னளவுக்கான சாதகபாதகங்களிரண்டிலும் தன்பர்த்தாவுக்கு உண்மையாகவிருந்துதவினாள். இவள் "மஹேந்திரர்" என்னும் ஒருஜமீன்தார் மனைவி, பஞ்சத்தில் ஜமீன்தாரும் ஓட்டாண்டியாக, தங்கள் செல்வக்குமாரியாம் "சுகுமாரி" யோடும் அவர்கள் பரதேசிகளாயலைந்தபொழுது, கள்வர்கையிலகப்பட்டுத் துன்புற்ற காலத்தில், ஸந்நியாசிகளால் விடுபட்டு, ஆனந்தமடத்துக் கிட்டுக்கொண்டு போய் "ஸ்வதேச" தீக்ஷைகொடுக்கப்பெற்று ஸத்யானந்தருக்கு இன்றியமையாத்துணையாகவும் உபகருவியாகவுமிருந்து அவருக்கு வேண்டிய உதவிகள் செய்தார். இக்கதையின் அருமையை உள்ளபடி முற்றும் வாசித்து அனுபவிக்கவேண்டும். இங்கே நாம் வற்புறுத்திக்கூறவந்தது கதையின் வரலாறல்ல. அதில் பொதிந்துகிடக்கும் தத்துவங்களைக் கிரகித்தொழுகவேண்டுமென்

பதே! உண்மையான "ஸ்வதேசி"க்கு தன் தேசமே க்ஷேத்ரரூபதேகமாம். "ஆப்நோதி ஸ்வாராஜ்யம்" என்ற சுருதியிற் சொல்லிய முக்தி ஸாம்பிராஜ்யம், தன் தேசத்தின் "ஸ்வாராஜ்யச் சிறப்பேயாம்." இப்படி யுழைக்கும் ஸ்வதேசியும் தன் தேசக்ஷேமத்துவாராவாக முக்திவீடடைகிறான். இது சத்தியம். இப்படி உபநிஷத்.

மோக்ஷசாதநங்கள் எல்லாவற்றிலும் இப்படி ஸ்வதேசத்துக்குழைத்து நிஷ்காமியகர்மஞ்செய்து பெறுவதான உத்தம சாதநமே மிகவும் மேலானது. சனகரைப்போலொத்த மஹான்கள் அநுஷ்டித்த மேலான சாதநவழியிதுவேயாம். போகிக்கு "எல்லாம் நான்" என்கிற அனந்தபாவனை வந்து நிலைப்பதே போக ஸாம்பிராச்சியமாம். அப்படிப்பட்ட உயர்பதவியடைய வுழைக்கும் தீக்ஷைபெற்றவன், "இந்த தேஹம் நான்" என்று க்ஷேத்ரபாவனைசெய்து தொடங்குவதிலும் "இந்த தேசம் நான்" என்று தன் ஸ்வக்ஷேமத்தை தேசக்ஷேமத்தோடு ஒன்றுபடக்கலந்து ஏகிபாவங்கொண்டு தொடங்குவது மிகவும் சிலாக்கியமல்லவா? பகவத்கீதை 18-வது அத்தியாயமான கடைசியுபதேசத்தில் அர்ச்சுனனுக்கு "மோக்ஷஸந்யாஸயோகம்" என்னும் தலைப்பில் ஸந்யாஸத்தினுடைய தியாகத்தின் தத்துவங்களை யெடுத்துச்சொல்கையில், "கர்ம்யாநாங்கர்மணாம்ந்யாஸம் ஸந்யாஸம்"— அதாவது, "தியாகமே ஸந்யாஸம்" என்றும், "கர்மபலன்களை ஈசுவரார்ப்பணஞ்செய்வது தியாகம்" என்றும் வற்புறுத்திக்கூறிப், பின்னர் நிஷ்காமிய கர்மதத்துவத்தையுபதேசிக்கையில்,—"அர்ச்சுனா! வேதாந்தசித்தாந்தங்களில் எல்லாக்கருமங்களின் சித்திக்காகச் சொல்லப்பட்ட ஐந்து காரணங்களை யுனக்குச் சொல்கிறேன், கேட்பாயாக!" என்று பின்வருமாறு உபதேசிக்கிறார்.

"திரிகரணங்களாகிய மனோவாக்குக் காயங்களோடு கூடிய நற்கருமத்தைபாவது தீக்கருமத்தையாவது மாநுடன் செய்ய ஆரம்பிக்கையில் அக்கர்மத்துக்குக் காரணங்களாயுள்ளவை ஐந்து. அவை:—

"அதிஷ்டாநந்ததாகர்த்தாகரணஞ்சப்ருதக்விதம்
விவிதாச்சப்ருதக்சேஷ்டா தைவஞ்சைவாத்ரபஞ்சமம்."—XVIII-14.

"(1) தேகம், (2) அகங்காரம், (3) இந்திரியங்கள், (4) பஞ்சப்பிராணன்களின் வியாபாரம், (5) இவற்றின் அபிமானதேவதைகளின் பிரேரேபணை;—என்று இவ்வகையாக ஐந்து காரணங்களுள்ளன."

"தத்ரைவம்ஸதிகர்த்தாரமாத்மாநங்கேவலந்துய:
பச்யத்யக்ருதபுத்தித்வாந்நஸபச்யதிதுர்மதி:"—XVIII-16.

"ஒவ்வொருகர்மத்துக்கும் ஏதுபூதமான காரணங்கள் மேற்சொன்ன வகையே ஐந்திருக்கையில், எவனொருவன் கர்மத்திற்குத் தானே கர்த்தாவென்று நினைக்கின்றானோ, அவன் அறிவுடையவனாகமாட்டான். அவ்வறிவில்லாதவன் ஆத்மதத்துவத்தை யுணரமாட்டான்".

இப்படி கர்மங்களின் தத்துவரஹஸியத்தையுபதேசித்து, கர்மபலத்தியாகத்தினால் நிஷ்காமியகர்மஞ்செய்து வருபவன் பெருமையைக் குறித்து அடுத்த 17-வது ஸ்லோகத்தில் சொல்கிறார்:—"எவனொருவன் தான் என்னும் அகங்காரத்தையடையாமல் கர்மபலன்களில் விருப்பற்றிருப்பானோ, அவன் இந்த ஜனங்களையெல்லாம் சங்கரித்தவனாயினும், அவன்கொன்றவனாகமாட்டான். அவனுக்கு அந்தக் கர்மபலன்களுந்தொடரா." இப்படியாவனொருவன் "ஞானம், கர்மம், கர்த்தா"வென்னும் மூன்றின் தத்துவங்களையும் மும்மூன்றாக விளங்கும் குணங்களுடைய ரூபமானவையாக அறிந்து நிஷ்காமியகர்மம் செய்து வருகிறானோ அவன் "ஆப்நோதிஸ்வாராஜ்யம், ஆப்நோதி மாநஸஸ்பதிம்..."என்னும் சுருதிவாக்கியப்படி "ஸ்வாராஜ்யம்" பெற்றுமனோவாக்காதிகளின் அதிபதியேயாகி பிரம்மஸ்வரூபமாய் விளங்குகிறான். இப்படி உபநிஷத். பகவான்வாக்கும் உபதேசமும் இப்படியே.

# Mr. Keir-Hardie's Visit.

## மிஸ்டர் கீர்-ஹார்டியவர்களின் விஜயம்.

பார்லிமெந்து மஹாசபையில் மெம்பராகிய மிஸ்டர் கீர்-ஹார்டியவர்கள் சென்ற அக்டோபர், நவம்பர் மாசங்களில் இந்தியாவுக்கு விஜயமாய் வந்து, வடக்கே ஹிமாலயம் முதல் தெற்கே தூத்துக்குடிவரையில் அங்கங்கே யிறங்கி இந்தியாவை ஒருவாறுபார்த்துப் போனார். இவர் பார்லிமெந்து சபையில் கைவேலைசெய்து ஜீவனம் செய்யும் கக்ஷியாரைச் சேர்ந்தவர். அக்கக்ஷிக்குத் தலைவருமாவர். இவர் பாலியத்தில் நிலக்கரிச் சுரங்கத்தில் சிற்றாள்வேலை செய்து பிழைத்தவர். "தன்முயற்சி"யால் இவர் கல்வியிற் றேர்ந்து வரவர மேல்பதவிக்கு வரலானார். வந்ததும் தான் பிறந்த வகுப்பைவிட்டு மேல்வகுப்பை நாடிப்புகுவது ஸ்வதர்மத்துக்கு விரோதமென்றுணர்ந்து கைவேலைசெய்து பிழைக்கும் உழைப்பாளிகளுக்கனுகூலமாகவே யுழைத்துவரக் கங்கணங்கட்டிக்கொண்டு, இன்னமும் தன்னை "வேலைக்காரன்" என்றே பெருமையாகச் சொல்லிக்கொள்கிறார். "பெருமையும் சிறுமையும் தான்தர வருமே." பெருமையும் சிறுமையும் தன்னாலேயன்றித் "தான்" என்பது (அப்படியென்றால் தத்பதவாச்சியார்த்தமான ஆத்மா அல்லது 'சித்') இல்லாத அசேதனப் பொருள்களிடத்தில் இல்லவேயில்லையாமென்பது உண்மை. ஆகையால் இவர் பேரும் கீர்த்தியும் பெற்றும் தன் தொழிலையும் தான் பிறந்தவகுப்பையும் பெருமையாகப் பாராட்டிக்கொண்டாடுவதால் தன் பெருமையை அத்தொழிலுக்கும் வகுப்புக்கும் பொருந்தச் செய்கிறார். இவர் சென்னைக்கு விஜயமாயிருந்தபொழுது, சென்னையிலுள்ள வேலைக்காரர்கள் பலர் சேர்ந்து இவருக்கு ஒரு வந்தனப் பத்திரமளித்தார்கள். அதில் இவரை வேலைக்காரனோடு வேலைக்காரனாக பாவித்து "வந்தே ப்ராதரம்" என்று அவருக்குவந்தனம் செய்தழைத்திருந்ததைக்கண்டு அவர் மிகவும் சந்தோஷப்பட்டதாகச் சொன்னார். எவரும் தம் ஜாதியிலிருந்து தன்னைத் தலையெடுக்கச்செய்துகொண்டு தன்னோடு அந்த ஜாதியையும்மேல்தூக்கிவிடக் கடமைப்பட்டவராயிருக்கிறாரென்று சொன்னார். இது பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், அர்ச்சுனனுக்குபதேசித்த வருணாசிரமதர்மத்துக்கு முற்றும் ஒத்ததாக விருக்கிறது, இந்தவுண்மையை யறியாதவர்கள் மேற்றிசை நாகரிக மினுக்கிலீடுபட்டவராய் வருணாசிரம தர்மத்தையிகழ்ந்து பேசுகிறார்கள். இப்பொழுதுள்ள குண்டுணிக் கோமுட்டிக் கக்ஷிகளான உள்வகுப்பைப்பற்றி நாம் அனுகூலமாக ஒன்றும் சொல்லவரவில்லை. எவரும் தீமையைக் கண்டிப்பதில் நன்மையையும் அஃதோடு கண்டித்துப் பாமரஜனங்கள் மனதில் வீண்குழப்பத்தை யுண்டாக்காதிருக்கவேண்டும். ஆகையால் தான் ஸ்வாமி விவேகானந்தர் எதையும் கண்டனம் செய்யாதே! நல்லதை யெடுத்துச்சொல்! தர்மத்தைத் தழைக்கச்செய்! கெட்டது தானே கெடும்"—என்று வற்புறுத்திக்கூறினார். யேசுகிறிஸ்துவும் "களைபிடுங்குகிறேனென்று பயிரையும் வேரோடு பிடுங்கிவிடலாகாது; களையும் பயிரும் சிக்குமுக்குற வேர்கலந்திருந்தால், அஃதையப்படியே விடுத்துப் பயிரை நன்றாகவளரச்செய்! அறுப்புக்காலத்தில் கதிர்களை யொருபக்கமும் களை

களை யொருபக்கமுமாகப்பிரித்துக் குவித்துவிடலா''மென்றார். இக்காலத்தில் இந்தியா முன்னுக்குவரவேண்டுமானால் தர்மஸ்வரூபிகளான சித்த-முக்தர்கள் முன்னுக்குவந்து ஊருக்குழைக்கவேண்டும். அவர்கள் முயற்சியால்தான் இந்தியா முன்னுக்கு வரவேண்டும். ஸ்ரீயுத விபினசந்திரபாலரும் இப்படியே சொன்னார். இந்தயாமந்திரியாகிய மிஸ்டர் மார்லியும் இப்படியே சொன்னார். இந்தியாவில் உயர்மனதுடைய உத்தமர்கள் ("the better mind of India") தற்சுதந்திரத்துக்காவும் தன்முக்திக்காகவும் பிரத்தியேகமாகவுழைப்பதிலிருந்து ஊர்ச்சுகத்துக்காவும், ஊர்க்ஷேமத்துக்காகவும், முன்னின்று முனைந்துழைக்கத்தூண்டப்படுவார்களாயின் அப்பொழுது எல்லாருக்கும் நன்மையுண்டாகுமென்று சொன்னார்.

மிஸ்டர் கீர்-ஹார்டி மஹாபுத்திசாலி. உண்மைக்குழைத்து உள்ளம் தேறினவராதலால் மனோசுத்தியுள்ளவர். ஜனஸ்வபாவத்தையுள்ளபடி யுணரும் நுட்பபுத்தியுள்ளவர். இப்படிப்பட்டவர் இத்தருணம் இந்தியாவுக்கு வந்து எங்கும் சுற்றிப்பார்த்து ஜனங்களோடு நேர்நேரில்பேசிப்பழகி, இந்தியா இராஜவிரோதமாயிருக்கிறதென்பதற்கு அத்தாக்ஷியோரிடத்திலும் காணக்கூடவில்லையென்றும், ஜனங்கள் ராஜவிசுவாஸமுள்ளவர்களாகவேயிருக்கிறார்களென்றும், ஸ்வதேசாபிமானத்தோடு ஸ்வதேசக்ஷேமத்துக்குழைப்பதை துர்ப்புத்தியுள்ளவர்கள் தாறுமாறுகச்சொல்லி சீமைக்குத் தந்திகளனுப்பி, அங்குள்ளவர்களை பயமெய்தச்செய்கிறார்களென்றும், இந்தப்பொய் புளுகுகளைத் தான் சீமைக்குத்திரும்பிப் போனதும் வெளியிட்டு உண்மை விளங்கச்செய்யப் பாடுபட்டுழைக்கத்தீர்மானித்திருப்பதாகவும் சொன்னார். இவரன்றி மிஸ்டர் நிவின்ஸன் என்னும் ஆங்கிலேய நிருபர் ஒருவர் வந்திருந்தார். அவரும் இவரைப்போலவே அபிப்பிராயப்பட்டார்.

இப்பொழுது இந்தியாவிலுண்டாயிருக்கும் கலக்கம், இந்தியாவுக்கேயுரியதன்று. ஜகமெங்கும் காசுக்கொழுப்பால் அக்கிரமஞ்செய்யும் அதிகாரவகுப்பார்கள் செய்யும் கொடுமைசகியாது சாமான்ய ஜனங்கள் தங்கள் சுதந்திரத்தை நிலைநாட்ட முயன்றுவருகிறார்கள். உலகத்தில் ஏகபோகானுபவம் மிஞ்சிப்போய், பிரத்தியேகநபர்கள் தலையெடுத்து வாழ்ந்து தர்மத்தைத் தலைகவிழச்செய்தது போதுமென்று ஜகதம்பிகை சாமான்ய ஜனங்கள் மூலமாக ஜனசமூகங்கள் வாழவேண்டுமென்று வாழ்ந்தாரைத்தாழ்த்தித் தாழ்ந்தாரை வாழவைக்கக் கருணை கூர்ந்துள்ளாரென்பது அகக்கண்கொண்டு பார்ப்பார்க்குப் பிரத்தியக்ஷமாய் விளங்குகிறது. "முகத்திற்கண்கொண்டு பார்க்கின்ற மூடர்கள்'' அகங்கார மமகாரமேலீட்டால் உள்ளதையுள்ளபடி யுணரமாட்டாது பொய்யையும் புரளியையும் மெய்யெனக் கட்டிவிட்டு வீண்ஜாலஞ்செய்து நிலையிலாத்தங்கள் நிலைமையை நிலைநாட்டி ஸ்தாபிக்கப்பார்க்கிறார்கள். சாமான்ய ஜனங்கள் அறிவீனர்களாயிருக்கும் வரையிலே இந்தஆர்ப்பாடம் பலிக்குமாதலால், சாமான்ய ஜனங்களுக்கு அறிவூட்டும் விஷயத்தில் அவர்கள் அசிரத்தையாயிருப்பதன்றி இடையூறும் செய்து வருகிறார்கள். "தர்மம் தலைகாக்கு''மன்றி அதர்மம் ஒருபோதும் தலைகாக்காது என்பது ஸநாதனமாயுள்ள நித்திய விதிகளில் ஒன்று. இதையுணர்ந்துமுணராமதியிலிகளுக்கு மதியூட்டத் தேவிதான் கண்பார்க்க வேண்டும்.

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம்.

# BHĀRATĪ MĀTA

## OR, THE AWAKENED NATIONAL CONSCIOUSNESS OF INDIA.

## பாரதீமாதாவின் திருப்பள்ளியெழுச்சி.

அல்லது

## "துரியாம்பாள் துரியஞான-பூஜை."



"இச்சாசக்தி உமாகுமாரி."-சிவசூத்திரம். "விச்மயோ யோகபூமிகா."-சிவசூத்திரம்,

(திருமந்திரம்.)

ஓங்காரியென்பாளவளொருபெண்பிள்ளை
நீங்காதபச்சைநிறத்தையுடையவள்
ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றிட்டு
ஹ்ரீங்காரத்துள்ளே யினிதிருந்தாளே."

(திருவாய்மொழி.)

"நன்றாய் ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து
ஒன்றாய்க்கிடந்த அரும்பெரும்பாழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடு! அதுவேவீடுவீடாமே!"

ஓம் ஸ்ரீமாத்ரே நம:




### I. ஆரோஹணம்.

1. குலதெய்வமென்றுநான் கும்பிட்டபெண்பிள்ளை
குழந்தையாவந்தெனுள் கொஞ்சு'றாள் பார்.

2. இழந்தசுகத்தைத் திரும்பப்பெறுவான்
குழந்தை வடிவுதான் கொண்டாளென்தாய்.

3. அஞ்சுவதில்லையென் றார்வநிறைந்தவள்
எஞ்சிநின் றாள்சுத்தக் கருவுருவாய்.

4. கெஞ்சித் தடுத்ததாய் வார்த்தையைக்கேளாமல்
மிஞ்சிச் சென்றாள் தவம் மேற்கொண்டாள்.

5. நாலஞ்சு மாகாத நாரியே தானாகி
வேலனைப் பெறுஞ்செல்வம் மிக்கவளாய்,

6. கோலஞ்சுங் குடிகளைக் காத்தளிப் பானவன்
வேலஞ்சும் வீரனைப் பெற்றிடுவாள்.

7. துஞ்சாத பஞ்சனைப் பாக்கியம் பெறும்படி
அஞ்சாதநெஞ்சுடன் தவம்புரிந்தாள்.

8. அஞ்சாதநெஞ்சுடன் துஞ்சாதவரம்பெற
அஞ்சஞ்சாப் பஞ்சீகரணம்விட்டாள்.

9. பஞ்சபூதங்களை மிஞ்சா தடக்கியே
அஞ்சஞ்சு தத்துவங் களையறிந்தாள்.

10. அஞ்சஞ்சு தத்துவங் களையறிந் துநீக்கி
எஞ்சிநின் றாள்பஞ்ச தன்மாத்ரையாய்.

11. எஞ்சிய அஞ்சும் ஒன்றுக்குள் ஒன்றாக
மிஞ்சியே நின்றாள் முக்குணமாய்.

12. முக்குண மாதவள் மூர்த்திகரித் தென்னுள்
நற்குண நாயகி யானாள் காண்.

13. நற்குண நாயகி நாட்டுக் குரியவள்
சற்குண சம்பந்நர் சகோதரி.

14. துற்குண வைரியள் துஷ்டர்க் கரியவள்
எக்குண மாந்தர்க் குமீச்வரி.

15. சற்குண துற்குண சாக்ஷியா நிற்பவள்
முக்குண முமொத்து வாழ்பவள்.

16. எக்குண மாந்தர்க்கும் அக்குண மாய்நின்று
தொக்குணர் வுதன்னில் தானே யாவள்.

17. தானாக நிற்பள் தத்துவ மும்ஆவள்
தானற்ற தத்துவன் தனைச்சேர்வள்.

18. ஏனற்று ஊனற்று ஊற்று எங்கும்
தானற்றுத் தன்மய மாகநிற் பள்.

19. வானற்று வளியற்றுத் தீயற்று நீரற்று
நிலமற்ற போதந்தன் நிலையா வள்.

20. நிலையாவள் நாயகி நீரில் நிலமாவள்
வளிதன்னில் வந்நியாத் தான்நிற் பள்

21. வெளியில் ஒளியாவள் வேந்தரில் முதலாவள்
தெளியில் அவள்உருத்தேன் தெவிட்டும்.

22. 'தெவிட்டாத்தேன் கட்டியென்'றோதினளென்
அவிட்டநாட் பிறந்தவனதையறிந் தான். [தாய்.

23. அவிட்டத்திற் பிறந்தவன் அவளையறிந்துள்ளே
தெவிட்டாமற் றானேதின் னுருசிகண் டான்.

24. உருசிகண் டவனுள் உள்ளத்திற் கண்டதை
ஊரெலாஞ் சொல்லிப் பரவவைத் தான்.

25. அறிவெனும் தேவியைப் பரவச்செய்தவன்
அறிவா னந்தம் தானா னான்.

26. அறிவா னந்தத்தில் ஆசீர்மம் பூண்டுதான்
தெரிவார் தெரிய தேவியைப் பூஜித்தான்.

27. பூசித்த அவனுக்குத் தேவியுந் தான்தோன்றி
நேசித்த பாசங்கள் போயிற் றென்றாள்.

28. போயிற்றென் றாள்பின்னும் போகவில்லையென்
ஆயிற்றாக வில்லை யறிந்துகொ ளென்றான். [றான்

29. அறிந்து மறியாமல் மயங்கித் தவித்தவன்
துறந்தும் துறவாத வேஷம் பூண்டான்.

30. உள்ளத்து உறவோ கள்ளத் துறவோவென்
றுள்ளத்தே ஐயங்கொண் டுருகிநின் றான்.

31. "உள்ளத்திற் கள்ளம் உளதாயிற் காண்பையோ
பள்ளத்தில் நீர்தங்கும் பான்மையே போல்?"

32. என்றவள் சொல்லியென் னடிமைநீ யென்றாள்
ஒன்றும் சொல் லாதவன் ஊமை யானான்.

33. ஊமையா னவன் ஊர்ப்பேச்சும் விட்டான்
ஆமைபோல் தன்னுள்ளே தானாகி நின்றான்.

34. காமத்தை விட்டவன் காரண மாய்நின்றான்
வேமன்ன போலவன் வெறிய னானான்.

35. ஆமென்ன ஊமென்ன ஈமென்ன வேமென்ன
ஓம் ஸ்ரீம் ஹ்ரீமென்ன வுள்ளே யுளறுவான்.

36. உளறுவான் உள்ளே குளறுவான் பின்னும்
கிளறுவா னவன் ஊரெல் லாம்.

37. உண்மையைச் சொல்வன் ஊரெல்லாம் கிளறுவ
(தேவி) தன்மையைக் கண்டவனுள்ளுருகுவன்.[ன்

38. உருகுவன் பெருகுவன் சருகுபோலுலருவன்
உருகுபொன் னொத்தவன் மேனியோ டுருகுவன்.

39. காமே ச்வரீயென்பன் வஜ்ரே ச்வரீயென்பன்
பகமா லினீ சரண்புக்கே னென்பான்.

40. அபயம்! அபயமென்பான்!
அஞ்சேல்! அஞ்சேலன்பாள்!
உபயத் துவனியுமழிந்
தொன்றாக வேண்டுமென்பான்!

41. சத்தமொடு பரிசமதும் ரூபரஸ கந்தமதும்[பான்.
ஒத்தழிய வேண்டுமென்று ஊசிமேல்தபவிருப்

42. சக்ரங்கள் தான்போட்டு அக்ஷரங்களைநிறைத்து
முக்காரம் தான்போட்டு முணுமுணுப்பா
[னுள்ளுக்குள்ளே.

43. அக்ஷரங்கள் தானுருகி அழியாத சோதியதாய்
லக்ஷங்கோடி யுருவான தேவதைகள் தானாகும்.

44. கோடானு கோடி தேவதைகள் தானுருகில்
ஈடான கோடிசூரிய உதயமும் தானாகும்.

45. வீடான வீடதாகும் விஷ்ணுசக்தியென்று
[சொல்லும்
கோடானு கோடிசூரிய காந்திதானுங்
[குளிரவேணும்.

46. கோடிசூரிய காந்தியெல்லாம் குளிர்ந்துபோய்ச்
[சந்திரனானால்
கோடிசந்திர உதயமதில்குளிர்ந்துபோ
[முன்மனது

47. குளிர்ந்துபோன மனமதனில்
சாந்தியது தான் பிறந்தால்
குளிர்ந்தொளிரும் சாந்தியதில்
உபசாந்தம் தான்பிறக்கும்.

48. உபசாந்தம் பிறந்ததானால்
உன்மத்தன் நீயாவாய்!
'உபசாந்தம்' சாந்தமானால்
சாந்தோப சாந்தமாகும்.

49. சாந்தோப சாந்தகுண
ஸாம்ராஜ்யம் தான் பெற்றால்
சாந்திப்பத்நீ தன்னோடே
சேர்ந்தொன்றாய் வாழலாமே

50. சாந்திப்பத்நீ யோடுவாழும்
சாயுஜ்யஸாம் ராஜ்யத்தில்
சாந்திப்பத்நி தன்வயிற்றில்
க்ஷமாபுத்ரன் தான்பிறப்பன்.

51. அரோக நிடகாத்ர க்ஷமாபுத்ரன் தான்பிறந்தால்
திரோபவா னுக்ரகங்கள் செய்யவருந் தானாக.

பலஸ்ருதி: (க்ஷமீம)

52. அந்தப் பதவியிலே அருளுடையா ளவள்தேவி
எந்தப்ப தவியிலும் இனிதிருக்கும் வாமளிப்பள்.

ஓம் ஸத்யானந்தஸ்வரூபிண்யைநம:

ஓம் தத்ஸத்.

### திருமந்திரம்.

" மூலநாடிமுக்கட்டலகுச்சியுள்
நாலுவாசல்நடுவிலிருப்பீர்காள்
மேலைவாசல்வெளியுறக்கண்டபின்
காலன்வார்த்தை கனவிலுமில்லையே."

" கற்பனையற்றுக்கனல்வழியேசென்று
சிற்பனையெல்லாஞ்சிருட்டித்தபேரொளிப்
பொற்பினைநாடிப்புணர்மதியோடுற்றுத்
தற்பரமாகத்தகுந்தன்சமாதியே."

### II. அவரோஹணம்.



53. அந்தவரம் நான் பெற்றேன்
அவளேநா னுய்விட்டேன்
எந்தவரம் வேண்டினாலும்
ஈவளவள் இதுநிச்சயம்.

54. நிச்சயமிது வானாலும்
நியமமிது வானாலும்
மித்தையான பாருலகில்
பாதக்கண்ட முய்யவேண்டும்.

55. உய்யவேண்டும் பாதக்கண்டம்
உலகெல்லாம் வாழவேண்டும்
பெய்யவேண்டும் நல்லமழை
பூவுலகம் செழிக்கவேண்டும்.

56. அதர்மமெங்கும் அழியவேண்டும்
தர்மமெல்லாந் தழைக்கவேண்டும்.

57. தழைக்க வேண்டும் தர்ம மானால்
தரணி மன்னர்கள் வாழ வேண்டும்.

58. தரணிமன்னர்கள் வாழவேண்டுமென்
றிரணியகர்ப்பனைப் பூஜைசெய்தேன்.

59. இரணிய கர்ப்பனும் தரணியில் தர்மம்
தழைக்க விலையது பிழையென் றான்.

60. பிழையைத் திருத்தப் பாரினில்தேவியை
அழைக்கவே யந்தர்-யஜ்ஞம் செய்தேன்.

61. அந்தர்-யஜ்ஞம் செய்து
அவளுக்கென்னைக்கொடுத்து
இந்தியா தான்பிழைக்க
வேண்டுமென்றேன் தேவிமுன்னே.

62. வேண்டுமென்றுகேட்ட வரமதனைக்கொடுத்து
தாண்டவ மாடிக்கொண்டு கூடவந்தாள் தேவி.

63. கூடவந்த தேவியைக்
கும்பிட்டுத்தொழு தருள்தான்
மூடவந்து இந்தியாவைக் கூடவேண்டு
[மென்றழுதேன்.

64. தம்பிமுகன் திருப்பாதம்
தொழுதெழுந்து அக்கினியை
அம்பிகை தாஸனவன்
தான்வளர்த்தான் மூலத்திலே.

65. முப்புரத்தே தேவியிட்ட முன்னைத்தீயுடனே
அப்புரத்தே யனுமனிட்ட லங்கைத்தீதனையும்,

66. அடிவயிற்றே யன்னையிட்ட அந்தத்தீயுடனே
படிவயிறு காய்ந்தெரியும் பாமரர் தீயையும்,

67. ஏழைகள் வயிறதுதான் எரியவே செய்யும்
கோழைமன துடைய குணக்கேடர் தீயும்,

68. பாலர்கள், ஏழைகள், மாதர்கள், தேவர்கள்
சாலவும் நம்பிக்கெட்ட சதிமோசத் தீயும்,

69. பொய்யைமெய் யாகவும்
மெய்யைப்பொய் யாகவும்
வெய்யவே தானுரைக்கும்
வாதுக்காரர் தீயும்,

70. உள்ளத்தை யுணராது கள்ளத்தைநம்பும்
வெள்ளையர் போடும் வேஷத்தீ யதுவும்,

71. இத்தனை தீயையும் ஒன்றாத் தஹிக்கும்
அத்தன் அருள்பெற்ற முக்தர்வாக் தீயும்,

72. ஆகிய தீக்கள் அனைத்தையும் ஒன்றாய்த்
தேறிய துள்ளத் துணர்பவன் யோகி.

73. அப்படிப் பட்ட யோகி யொருவன்
எப்படிப்பட்ட துன்பமு மஞ்சான்!

74. புலித்தோல்தண்டு கமண்டலத்துடனே
புறத்தோடகத்துறவனைத்தும்பூண்டு,
புலிகிலிப்பேச்சுக் கஞ்சானாகிப்
புண்ய பாபமும் வேண்டானாகி,

75. அக்னியைத்தான்வளர்த்து ஆஹுதிகள்செய்து
ஓமாக்னி தன்னில்தன் உள்ளத்தை நாட்டி,

76. சிதக்னி குண்டத்திற் செழுந்தீ வளர்த்து
சிதக்னி-குண்ட ஸம்பூதை யானாளை

77. ஸ்ரீதேவி தன்னை பாரதி மாதாவை
"ஸ்ரீமாதா மரகத: சியாமாபா" வென்றேத்தி,

78. மன்றுளே யாடும் மாதாவைத் தொழுது
கன்றுள்ள தாய்போற் கதறியழ வும்மே.

79. என்றுமுள்ள வென்றன் அம்பிகை தானும்
கன்றுதன் தாய்பால் துள்ளிடு மாபோல்,

80. யோகியின் உள்ளத்தே துள்ளிக் குதித்து
யோகிதன் னகமும் புறமுமாய் நிறைந்தாள்.

81. நிறைந்தவள் தோற்றம் நேரிழை ரூபமால்
இறையவன் பூசுரற் கிறையவ ளானள்.

82. சுயம்பூ லிங்க சார்வேச ருக்கு
சுகேசி ரூப சக்தியு மானள்.

83. துஞ்சாத பஞ்சணைப் பாக்கியம் பெற்றுத்
துயிலுணர் தேவியின் தூக்கந்தா னறிந்து

84. அஞ்சாத நெஞ்சுடை யந்நியர் தாமும்
பஞ்சாப்பறக்க விட்டனர் பேதையை.

85. அன்னைபோ லன்பும் அருணிறை யுள்ளமும்
தன்னுயிர் போல மன்னுயிர் காப்பாள், †

86. "ஆண்டவ னறிய அணைத்தென் மக்கள்போல்
ஈண்டிவ் விராச்சியம் ஆள்வே" னென்று

87. வாக்கது கொடுத்த வார்த்தையைக் கேட்டு
நாக்கது புரளா நாரிவேந் தென்று,

88. போக்குடன் வரத்தும் போக விட்டவள்
ஏக்கமில் தூக்கம் இசையப் பெற்றாள்.

89. சொன்னசொற் கடந்து சத்தியந் தவறி
அன்னைசொல் தவறி அகந்தை மேலிட்டு,

90. தன்னுயிர் போலும் தனியன்க ளிருவரை
இன்னுயிர் கொள்ளும் யமனே போல,

91. மன்னுயிர் வதைக்கும் மன்னர் களைப்போல்
பன்னுமொர் சொல்மாத் திரந்தன் னாலே,

92. வெளியே கொண்டுபோய் வாய்ப்பூட்டுமிட்டுப்
ஒளவியம் பேசி ஆர்வ மழித்தனர். [பின்

93. ஆர்வம ழித்தவர் அலங்கோல முங்கண்டு
ஊர்வாயை மூடுவான் உலைமூடியுஞ் செய்து,

94. "குடியுயரக் கோலுயரும்" என்பதையு மறந்து
"கோலுயரக் கோனுயரும்" தர்மபதை யிகழ்ந் [தார்

95. "அரசன் தன்சொற் காவா னுயின்
அரசொடு குடியும் அல்லற் படு"மென

96. ஒளவையார் சொல்லிய அறநெறி யெல்லாம்
செவ்வையா வுணரார் சீர்கே டுறுவார்.

97. அஹம்பாவத்தா லழிந்தான் துரியோ தனனும்
இதம் பாவத்தா லிழிந்தாரிந்நாட்டார்காண்!

98. இழிந்தாலும் தோஷமிலை பழிபாவம் பற்று
அழிந்தாலும் வாழவைப்பள் [தாகில்
குழந்தைமனம் மாறாதாகில்!

99. ஆனைவரும் பின்னே மணி
யோசைவரும் முன்னேபோல்
ஊனைவரும் விதிப்பயனை
யொறுக்கலாமோ சொல்லேன்!

100 ஆகையால் அம்பிகையை
ஆர்வமுடன் தொழுதேத்தி,
இருகையும் தான்கூப்பித்
தொழுகிறான் யோகி!

101. "துன்பங்கள் தீரவேண்டும்
தொல்சீர்மை யடையவேண்டும்
இன்பதுன்பந் தானறியாத்
தீரமது தான்வேண்டும்.

102. "கஷ்டங்கள் தீரவேண்டும்
கர்மங்கள் தொலையவேண்டும்
"இஷ்டங்கள் சேரவேண்டும்
இன்னுயிரே யென்தாயே!

103. "நஷ்டங்கள் போகவேண்டும்
நாடுநன்றாச் செழிக்கவேண்டும்
சிஷ்டர்க ளெங்கும்
செழித்தோங்க வேண்டுந்தாயே!

104. "துஷ்டர்கள் கொட்டங்கள்
அடங்கவேண்டு மென்தாயே
"இஷ்டர்கள் சட்டமுடன்
சீர்பெற்று ஓங்கவேண்டும்.

105. "உன்கதம்பவன நீழலிலெம்
கஷ்டங்களை யாம்மறப்போம்
"உன்கற்பகத்தரு வடியிலெங்கள்
இஷ்டநிறை வெய்தட்டும்.

106. "(உன்)சாலவிருக்ஷத்தோப்பதனில்
போஹன்க்கும் ஈசனுக்கும்
"ஆலவிருக்ஷம் போல்பிறந்த
ஐயன்சாஸ்தா காக்கட்டும்!

ஸம்பூர்ணம்.

107. "ஹிருதயகமல மனநடுவே
இருக்குஞ்சிந்தா மணிக்கிரகத்தில்
"காமரூப பீடமிட்டோம்
காத்தருள்வாய் ஜகதம்பிகே!

108. "பூர்ணகிரி பீடமிட்டோம்
பூஜ்யதேவதையே காத்தருள்வாய்!
"ஜாலந்தர பீடமிட்டோம்
ஜயவிஜயை! ஜய ஜயமு."

வாழ்த்து.

வாழ்கவந்தணர் வாழ்க வின்றமிழ்
வாழ்கசெந்தண லொத்தமாதர்கள்
வாழ்கமாதவர் வாழ்கமாரியர்
வாழ்கவீ ரன்வலி வீரச் சதிசெயல்.

சுபமஸ்து.

† விக்டோரியாசக்ரவர்த்தினி.

SHORT STORY.

## "IMPOSTORS ALL."

## "படாடோபம்."

ஒரு நாள் காலையில் நான் எனது சிற்றறையில் ஒரு சாய்மணையில் உட்கார்ந்திருந்தேன். வழக்கம்போல் எனது சேவகன் அன்றைய தினம் தபாற்காரனால் கொண்டுவரப்பட்ட, சமாசாரப் பத்திரிகைகளையும், கடிதங்களையும் சாய்மணைக்கருகிலிருந்த எனது மேசையின் மேல் வைத்துவிட்டு வெளியே போனான். நானும் எனது பரிசாரகனால்கொண்டுவரப்பட்ட சிற்றுண்டியைச் சாப்பிட்டுவிட்டு லக்கோடாவை ஒவ்வொன்றாய் உடைத்து காகிதங்களைப் பார்த்துக்கொண்டு வருகையில், அக்கடிதங்களோடு கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்த ஒரு அச்சடித்த கார்டு என்விலாசத்துக்கு அனுப்பப்பட்டிருந்ததையும் கண்டேன். வழக்கமாய் அநேக கம்பெனிகளினின்றும் வரும் கார்டுகளைச் செய்வதுபோல அதையும் குப்பைக்கூடையில் (Waste paper basket) போட எத்தனித்தவன், அக்கார்டில் அச்சடிக்கப்பட்டிருந்த வரி கண்ணில் பட்டதும் அப்படிச் செய்யாமல் ஒரு தரத்திற்கிருதரமாய் அதை நன்றாய்ப்படித்துப்பார்த்து போலீஸ் இன்ஸ்பெக்டர் சூக்ஷ்மதிர்ஷ்டிக்குச் சொல்லியனுப்பினேன். அவரும் அரைமணி நேரத்துக்குள்வந்து என் பக்கத்திலிருந்த ஒரு நாற்காலியில்உட்கார்ந்தபிறகு, பின்வரும் சம்பாஷணை நடந்தது.

இன்ஸ்பேக்டர் :—"என்ன விசேஷம் அவ்வளவு அவசரமாய்க்கூப்பிட்டீர்?"

"ஒன்றுமில்லை, காலைத் தபாலில் எனதுவிலாசத்திற்கு ஒரு கார்டுவந்திருக்கிறது. அதைப் பார்த்ததும் எனக்கு, ஒன்றும் தோன்றவில்லை. எவன்எழுதியிருப்பான் என்று ஊகிக்கவும்,கூடவில்லை ஆகையால் தங்களுக்கு ஆள் அனுப்பினேன்' என்று சொன்னேன்.

இன்ஸ்பேக்டர் :—"அப்படித் தங்களுக்கு அவ்வளவு பயத்தை உண்டாக்க கார்டில் என்ன இருந்தது?"

"நீங்கள் தான் பாருங்களேன்.' என்று அந்தக்கார்டைக் கொடுத்தேன். (அதைப் படித்துப்பார்த்தார்).

இன்ஸ்பேக்டர் :—"எழுதினவனுக்கு காலணாச்செலவு, உங்களுக்குஎப்பொழுதும் கூடவேவர ஒரு மெய்க்காவலின் சம்பளம் (Bodyguard) மாதம் 10 ரூபாய் செலவு. போலீஸ்காரர்க்கோ 7ம் நெம்பர் பாரம் கொடுக்குமளவும் நெட்டிகழல வேண்டியது தான். இவ்வளவு தானே, வேறு ஏதாவது விசேஷமுண்டோ?

"ஒன்றுமில்லை.' என்றேன்.

இன்ஸ்பேக்டர் :—'ஆனால் நான்வரட்டுமோ?'

"சரி! போய் வாருங்கள். கொஞ்சம் ஞாபகமிருக்கட்டும்.'

(இன்ஸ்பெக்டர் போகிறார்).

இன்ஸ்பெக்டர் போனபின், மறுபடியும் கார்டைப்படித்துப் பார்த்துவிட்டு எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன். என்ன அக்கிரமமாயிருக்கிறது "எனது 32 பற்களையுமா காப்பாற்றிக் கொள்ளவேண்டும்?'. எந்தப்பயல் எழுதி யிருப்பான்? சுப்பு ரெட்டியாயிருக்குமோ? சீ; அவன் அவ்வளவு ஹல்காத்தனத்துக்குப் போகமாட்டான். பின் யாராயிருக்கலாம்? வேறுயாரும் எனக்கு விரோதிகளைக்காணோம். இருக்கட்டும்! பார்க்கலாம்! இன்ஸ்பெக்டர் சொன்னபடியே ஒரு ஆள் கூடவே இருந்தால் நல்லதுதான். 10 ரூபாய் போனால் போகட்டும்.

இதற்குள் பக்கத்து வீட்டிலிருக்கும் வக்கீல் ஷோக்சுந்தரமய்யர் உள்ளே வந்து "என்ன சாவகாரவாள் என்ன விசேஷம்? ஏதோ ஒரு மாதிரியாய்இருக்கிறதாய்க் காண்கிறதே! உடம்பு சரியாய் இல்லையா என்ன?' என்று சொல்லிக்கொண்டு இன்ஸ்பெக்டர் சற்றுமுன் உட்கார்ந்திருந்த நாற்காலியில் உட்கார்ந்தார்.

"உமக்கென்ன ஐயா! விசாரமுண்டா; எப்பொழுதும் கோலாஹலபுருஷன், தகப்பனார் யதேஷ்டமாய் பூஸ்திதி சம்பாதித்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார். நீர் என்னதான் வாரிஇறைத்தாலும் இரண்டு மூன்று தலை முறைகளுக்குத்தாளும், தவிர வக்கீல் வேலையில் வரும்படியும் இருக்கிறது! உமக்கு என்ன ஐயா குறைவு!" என்று சொன்னேன்.

ஷோக்சுந்தரமய்யர்:—"என் தகப்பனார் வைத்துவிட்டுப் போனதை நீர்தான் மெச்ச வேண்டும். வக்கீல் வேலையில் எனக்கு யதேஷ்டமாய்வரும்படி மாதம் 30-நாளும் சிலமாதங்களில் 31-நாளும் பிப்பிரவரிமாசத்தில் 28, 29-நாளும் வருகிறதென்பது ஊருக்கே தெரிந்தவிஷயம். என்பூஸ்திதிகளின் மேல் நூறுகாசுகூடக் கொடுப்பார் இல்லையென்பது உமக்குத்தெரியாததல்ல. ஏனெனில் அதில் கோஷ்பரத (?) பூமி பாக்கியன்னியில் உமக்கு அடைமானந்தானே! இதெல்லாமிருக்கட்டும் என்ன ஒரு மாதிரியாயிருக்கிறீரே?"

நான் ஒன்றுமில்லை. உம்மோடுசொல்லாமல்யாரோடுசொல்லப்போகிறேன். இன்றைக்குக்காலமே எனக்கொருகார்டு வந்தது. அந்தக்கார்டில் "உமது 32 பல்லையும் காப்பாற்றிக்கொள்ளும்" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. நான் நாட்டுக்கோட்டை செட்டிகளைப்போல் 100-க்கு ஆறேழு விழுக்காடு வட்டி வாங்குகிறதில்லை. குடிமுழுகிப்போகும்படி செய்கிறதில்லை. தாம வட்டி அரைவட்டிக்குப் பணம் கடனாகக் கொடுக்கிறேன். அப்படியிருக்க எனக்கு யாரய்யா விரோதிகளிருக்கலாம்? கொஞ்சநாளுக்குமுன் சுப்புரெட்டி ஒரு ஆயிரம் கடன்கேட்டான். அதற்கு நான் "அப்பா! முன் பாக்கியே வரக்காணோமே; இப்பவும் வாங்கிப்போனால் திருப்பிக்கொடுப்பதெப்படி?" என்று மிகவும் நயமும் பயமுமாய்ப் பதில் சொன்னேன். அவனும் யாதொரு கோபக்குறியோடு போகவில்லை. ஒருக்கால் அவன்தான் எழுதியிருப்பானோ என்று சந்தேகித்தேன். ஆனால் யோசித்துப்பார்த்தால் அப்படி ஒன்றுமிராதென்று எனக்கே தோன்றுகிறது"

ஷோக்சுந்தரமய்யர்:—இதற்காகவா கவலையாயிருக்கிறீர்? இன்றையதினம் சமாசாரப் பத்திரிகையைப்பார்த்தீரோ ஐயா? அந்த மாதிரி கார்டு வந்திருப்பது உமக்கொருவருக்கல்ல. இவ்வூரில் ஒரு பெரியமனுஷ்யன் பாக்கியில்லாமல் வந்திருக்கிறது. நேற்றையதினம் "காஸ்மாபாலிடன் கிளப்பில்" டென்னிஸ்முடிந்தபிறகு, சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். ஹைகோர்ட்டு வக்கீல் ஜீவநாதய்யர், முன்சீப் கோர்ட்டு வக்கீல் மோஹன் சிங்கு, பிறைவேட் வக்கீல் பழனியப்பசெட்டியார், முதலான எல்லாருக்கும் உமக்கு வந்ததுபோலவே கார்டுவந்திருந்ததாயும் அவைகளெல்லாம் யாரோ பரிகாசத்திற்காக எழுதியிருக்கலாம், கெடுதல் செய்ய எண்ணங்கொண்டு எழுதியிருந்தால் ஒருவர் இரண்டு பேருக்குவந்திருக்கும்; ஊரிலுள்ள எல்லாருக்குமா வரும்? ஒருநாளுமிராது! என்று சொல்லிவிட்டதாயும் பேச்சுநடந்தது. தவிர இன்றையதினம் சமாசாரப் பத்திரிகையைப்பாரும். அதில் இதைப் பற்றி போட்டிருக்கிறது.

நான்:—சமாசாரப்பத்திரிகையை பிரித்தூக்கொண்டே, "கார்டைப்பார்த்ததும் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. அதனால்தான் இதைப்பிரிக்கக்கூட இல்லை"-என்று சொல்லிவிட்டு பத்திரிகையினின்றும் பின்வருமாறு படித்தேன்.

"ஓங்கோல் கால்நடைக் கண் காக்ஷி"
"மதுரை சமாசாரங்கள்"
"கோயமுத்தூர் சமாசாரங்கள்"
"ஆபத்தைக்குறிக்கும் அச்சுபோஸ்கோர்டு"!
ஆஹா:

"ஐயா,

சென்ற ஒருவாரமாக இவ்வூர் அல்லோலகல்லோலப்பட்டுக்கொண்டிருக்கிறது. ஊரில் ஒருபெரிய மனுஷ்யனுக்காவது பாக்கியில்லாமல் "உமது 32 பற்களையும் காப்பாற்றிக்கொள்ளும்" என்று அச்சிட்டுள்ள கார்டுகள் வந்திருக்கின்றன. இதனால் ஜனங்கள் அதிக காப்ராப்பட்டுக்கொண்டு வெளியில் தனியாய்ப் போவதில்லை. எப்பொழுதும் நாலைந்துபேர்கள் கூடியே போகிறார்கள். மைமன்சிங்கில் நடந்ததுபோல, இவ்வூரிலும் மஹம்மதியர்கள் ஒன்றுகூடி, ஹிந்துக்களை கையப்புடைக்கத் தீர்மானித்திருப்பதாக ஒருவதந்தி. கூடியசீக்கிரத்தில்இந்த காப்ராக்களுக்கெல்லாம் காரணமானவர்களைக் கண்டுபிடித்து தண்டிக்கவும் ஜனங்களின் பீதியை நீக்கவும் தக்க ஏற்பாடு செய்யப்படுமென்று நம்புகிறேன்.

உண்மையுரைப்போன்."

என்று இதைப் படித்ததும் நான் ஒருவாறு மனக்கவலை தீர்ந்து ஷோக்சுந்தரத்தைப்பார்த்து: 'நீர் சொல்வதுவாஸ்தவந்தான். செய்கிறதாயிருந்தால் ஒருவன் ஊரூரெல்லாருக்குமா தீங்கிழைப்பான்! எல்லாருடைய பற்களையுமா தட்டிப்போடுவான்! அதைப்பற்றி பயப்படவேண்டியதில்லைதான். முதலில் எனக்கு மாத்திரம் தான் அவ்விதக்கார்டு வந்ததாக எண்ணி மனக்கவலையுற்றேன். இப்பொழுது அக்கவலை பாதி நீங்கிற்று ஏன் பாதியென்றால் இப்பத்திரிகையில்கண்டபடி இவ்வூர் மஹம்மதியர்கள் இதற்கெல்லாம் காரணமாயிருக்கலாமல்லவா? இருக்கட்டும்! மற்றவர்களுக்கு நேரிடுகிறது எனக்கும் நேரிட்டுமே. "ஊருடன் ஒத்துவாழ்" என்று ஔவைகூடசொல்லியிருக்கவில்லையா. இதெல்லாம் போகட்டும்! எங்கே இந்நேரத்தில் நீங்கள் இவ்விடம் வந்தது-என்று கேட்டேன்.

ஷோக்சுந்தரமய்யர்:—"நான் உம்மிடம் எதற்காகவையா அடிக்கடி வருவது வழக்கம்? வரும்போது வெறுங்கையோடு வருவேன். போகும்போது சட்டைப்பையில் பணம் கலகலவென்று ஓசைசெய்ய வெளியேபோவேன்; வளர்த்துவதில் என்ன! எனக்கு ஆயிரம் ரூபாய் இப்பொழுது கடன்வேண்டும்; பிராமிசரிநோட்டு எழுதித்தருகிறேன். வட்டியை வேண்டுமென்றாலும் முன்னதாக எடுத்துக்கொள்ளும். ஆறுமாதத்தில் ஜாடாவாய்ப் பைசல் செய்து போடுகிறேன்."

"என்ன ஆயிரம் ரூபாய்க்கு அவ்வளவு அவசரம்?"

ஷோக்சுந்தரமய்யர்:—அதை யேன் கேட்கிறீர்கள்; அவ்விபாகிருதவியாபாரத்தின் பலன். வீணைதாசி தனபாக்கியம் இருக்காளே தெரியுமா? அவளோடு ஒரு உடன்படிக்கை பண்ணிக்கொண்டேன். மிட்டாதார் குப்பைப்பர் வீட்டுக்கல்யாணத்தில் நாலுநாளும் அவள்கச்சேரி யென்றும் நாள் ஒன்றுக்கு 300 ரூபா. வீதம் 1,200 ரூபாய் வாங்கித் தருகிறேன் என்றும், முதல் நாள் கச்சேரி நடந்தது. வீணையின் தொனி பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்களுக்கு மாத்திரம் கேட்டதாம், தூரத்திலிருந்தவர்களுக்குக் கேட்கவில்லையாம். ஆகையால் ஒருநாள் கச்சேரி போதுமென்று சொல்லி 300 ரூபா மாத்திரம் கொடுத்தனுப்பிவிட்டார்களாம், இன்றையதினம் காலையில் "ரூபா. 1200 ல் குப்பைப்பரால் செல்லு ரூபா. 300 போக பாக்கி ரூபா. 900-ம் வக்கீலுக்கு பீஸ் கொடுத்த ரூபா. 100ம் ஆக ரூபா. 1000-மும் ஒருவாரத்தில் கொடுக்கப்படாவிட்டால் நடவடிக்கை நடத்தப்படும்' என்று லாயர் நோட்டீஸ் ஒன்று தனபாக்கியம் அனுப்பியிருக்கிறாள். என்ன செய்யச்சொல்கிறீர். சரியாய் 1,000 ரூபாய் ஒருவாரத்திற்குள் வேண்டும், கோர்ட்டு ஏறாமலிருக்க. என்ன சொல்கிறீர்?

இந்த சமயத்தில் என்கையில் 1,000 ரூபா சேருவது கஷ்டம். பணமெல்லாம் வெளியில் முடங்கிக்கிடக்கிறது. ஆயினும் இந்தச் சமயத்தில் இல்லையென்று சொல்லிக்கைவிட இஷ்டமில்லை. மேசையின்மேல் மைக்கூடு பேனா காகித மிருக்கின்றன. எழுதும் ஒரு புரோனோட்; ஸ்டாம்புவேணுமே! இரும் பார்க்கிறேன், என்னுடைய டையிரியில் நேற்று ஒன்று வைத்திருந்தேன்—என்று சொல்லி, ஸ்டாம்பை எடுத்துக்கொடுத்து பிராமிசரிநோட்டை எழுதிவாங்கிக்கொண்டு பணத்தைக் கொடுத்தனுப்பி விட்டேன்.

மேற்சொன்ன சங்கதிகள் நடந்த பிறகு இரண்டொரு மாதங்கள் வரையில் சமாசாரப்பத்திரிகைகளில் "யாரோஜனங்களுக்கு பீதியை உண்டாக்க எண்ணமுற்று கையெழுத்தில்லாமல் கார்டுகளில் "உமது 32 பற்களையும் காப்பாற்றிக்கொள்ளும்" என்று அச்சிட்டு தபால் மூலியமாய் பற்பல பேர்களுக்கு அனுப்பியிருக்கிறார்கள். அவர்களைப் பிடித்துக்கொடுக்கிறவர்களுக்காவது அல்லது சரியான துப்புக்கொடுக்கிறவர்களுக்காவது சர்க்காரால் ரூபா. 500 இனாம் கொடுக்கப்படுமென்றும், ஜனங்களுக்கு மஹம்மதியர்களிடமிருந்து அபாயம் வரலாம் என்ற பீதியை ஆற்ற கவர்ன்மெண்டார் ஒரு "துருப்பு" ஊரில் கொண்டுவந்து வைத்திருப்பதாயும் செந்தலைப்புலிகள் குற்றவாளிகளைக்கண்டு பிடித்து தண்டனைக்குக்கொண்டு வரவேண்டிய பிரயத்தனங்கள் செய்துகொண்டிருப்பதாயும் ஜனங்கள் பயப்பட

வேண்டியதில்லை யென்றும் இன்னம் நானு விதமாய் எழுதப்பட்டு வந்தன. இன்னம் சிலநாளுக்கெல்லாம் கார்டின் சங்கதி முற்றிலும் மறந்துபோயிற்று. மஹம்மதியர்கள் ஹிந்துக்களை ஹிம்ஸிக்க கங்கணம்கட்டிக் கொண்டிருந்ததாகச்சொன்னசங்கதி முற்றிலும் பொய்யாய்ப்போய்விட்டது. செந்தலைப் புலிகளின் பிரயத்தினமும் வீணாய்விட்டது. குற்றவாளிகள் தப்பித்துக் கொண்டார்கள். சிலநாள்சென்றபிறகு ஒருநாள்வழக்கம்போல் காப்பிகுடித்துவிட்டு தபாலை உடைத்துப் பார்த்துக்கொண்டு வருகையில் முன்வந்திருந்ததுபோல ஒருகார்டு கடிதங்களுக்கு மத்தியில்லிருக்கக்கண்டேன். அதைஎடுத்துப்படித்ததும் மேசையைத்திறந்து முன்வந்திருந்த கார்டை எடுத்துப்பார்க்க, ஆச்சரியம்! ஆச்சரியம்! முன் அச்சிட்டிருந்த" உமது 32 பற்களையும் காப்பாற்றிக்கொள்ளும்" என்னும் வரிக்குமேல் "தந்தரோகநிவாரணி என்னும் பல்பொடியை வாங்கி உபயோகித்து வந்து" என்னும் வரி காணப்பட்டது. கொஞ்சநேரத்துக்கெல்லாம் ஷோக்சுந்தரமய்யரும் இன்னொரு அவ்யாகிருத வியாபாரத்தி நிமித்தம் மற்றொரு ஆயிரம் கடன் வாங்கவந்தவர் அக்கார்டைப் பிடித்துவிட்டு அவரும் நானும் வயிறு வலிக்கச் சிரித்தசிரிப்பை நினைக்க இப்பவும் எனக்கு சிரிப்பு வருகிறது.

பிறகு எங்களிருவருக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

நான்: "ஷோக்சுந்தரமய்யரே, நான் மேஜையில் வைத்துப் பூட்டியிருந்தகார்டை எடுத்து எவன் ஐயா அப்படி அச்சிட்டிருக்கக்கூடும்? தவிர இப்பொழுது வந்த கார்டில் முன்வந்த கார்டை எடுத்துப்பாரும் என்று எழுதப்பட்டிருக்கிறதே அதெப்படிஐயா மூணாவது மனுஷனுக்குத்தெரியும்? இவ்வளவு பந்தோபஸ்துள்ள என்வீட்டில் உட்புகுந்து மேஜையிலிருக்கும் கார்டை எடுத்து அப்படி அச்சிட்டு வைத்துவிட்டுப்போகச் சக்திஉள்ளவன் என்னதான் செய்யமுடியாது? ஏது எனக்கு ஏதோ போதாதகால மாய்த்தோன்றுகிறது! ஏழரை நாட்டு சனியின் செய்கைதானோ? ஆனால் ஜோசியர் "இதுபொங்குசனி கெடுதல் செய்யாது" என்று சொன்னாரே. எனக்கு என்ன செய்கிறதென்று தெரியவில்லை! போலீஸ்டேஷனுக்கு ஆளனுப்பவா? சொல்லும்! என்கிறேன்.

ஷோக்சுந்தரமய்யர்:—ஹா, ஹா, ஹா, ஹா, ஹா, ஹா.

"ஐயரே"! நீர் கர்னாடக மனுஷ்யன்; நாளுக்கு நாள் உலகம் எவ்வளவு சீர்திருத்தத்திற்கு வந்து கொண்டிருக்கிறது என்பது உமக்குத்தெரியாது. "Inventions and discoveries of the 19th century" என்னும் புத்தகத்தைப்படித்துப் பார்த்தீரானால் தெரியவரும். உமது வீட்டில் யாதொரு வேற்று மனுஷ்யனும் புகவில்லை. நீர் போலீஸ்டேஷனுக்கு ஆள்விடவும் வேண்டாம். நான் சங்கதி சொல்லுகிறேன்: ஒருவகைத்திராவகத்தைச் சேர்த்து காய்ச்சி அம்மசியால் எழுதினால் அம்மசிகாய்ந்து போனவுடன் வெறுங் காகிதமாகத் தோன்றும். பிறகு சில நாட்கள் சென்றாலாவது அல்லது உஷ்ணம்பட்டாலாவது. அவ்வெழுத்துக்கள் தெரியும். இது தானய்யா ரகசியம்! பற்பொடி விலைபோவதற்காக இப்படி செய்திருக்கிறான், வேறொன்றுமில்லை!" என்றார்.

"என்னத்துக்கப்பா அவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டு தெரியாமசியால் எழுதி ஜனங்களுக்குபீதியையும்போலீஸ்காரர்களுக்கு வேலையையும் வீணாய்கொடுக்கவேண்டும் நல்லமசியால் ஏன் ஒரே தடவையில் எழுதி அனுப்பியிருக்கலாகாது. ஏன் முதல் ஒரு கார்டு எழுதி அதற்குக் காலணாச் செலவு செய்துபிறகுபழைய கார்டைஎடுத்துப்பாரென்றுஇன்னொரு காலணா செலவழித்து இன்னொருகார்டுஎழுதுவானேன்? காசுக் கொழுப்பாயிருக்கலாமா?" என்றுகேட்டேன்.

ஷோக்சுந்தரமய்யர்:—சாவகாரவாளே "நீர் கர்னாடகமனுஷ்யனென்று" நான் முன்னேயே சொன்னேனே. கேளும்: ஏதாவது ஒரு கடை, ஹோட்டல், முதலான இடங்கள் பிரபலமாக வேண்டுமென்றால் அதில்ஏதாவது ஒருபக்கத்தில் நெருப்புவைத்தாவது கொஞ்சம் எரித்து விடவேண்டும் இச்சங்கதி சமாசாரப் பத்திரிகையின் வழியாய் எங்கும் பரவி ஒரு நாளும் இந்தப்பேருள்ள ஹோட்டலாவது கடையாவது இந்தவிடத்தில் இருக்

கென்று தெரியக்கொஞ்சமேனு. ஹேஷ்ய மில்லாத இடங்களிலும் தெரிந்து போகக் காரணமாகிறது. நீர் ஆயிரம் ரூபாய் கொடுத்து உமது கடையிருக்குமிடம் மூதலான தைசமாசாரப் பத்திரிகைகளில் பிரசுரம் செய்வதைக் காட்டிலும் பத்திருபது ரூபாய்க்கு ஒரு சாலை போட்டும் அதை எரித்துவிட்டால் உமது எண்ணம் நன்ருய்க் கைகூடுமையா! இதுகளெல்லா வியாபாரிகளின் தந்திரம்! இருக்கட்டும்! 'எனக்கு இன்னம் ஆயிரம் ரூபாய் கடன் கொடும் ஒருஜதை குதிரை விலை தீர்த்திருக்கிறே' னென்று சொல்லி ஒரு ஐ. ஒ. யூ. எழுதிக்கொடுத்து ஆயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டுபோய் விட்டார்.

(முற்றிற்று)

எம். என். கணேசய்யர்.

———:(*):———

# *அவிழ்த்துவிட்டகழுதை.

3. பாலியம் (தொடர்ச்சி.)

———:(*):———

வேடிக்கையாகவல்லாமல் வாஸ்தவமாகவே பேசுவோம். தபால்வண்டியைக்காட்டிலும் பத்திரமான இடம் சந்தடியில்லாமல் தூங்கக்கூடிய ஒரு படுக்கை உள்ளென்று சொல்லலாம். ஆனல் அங்கேயும் தெய்வீகமான சில ஆபத்துகள் நேரக்கூடும். இரவில் திருடர்கள நுழையலாம், நெருப்புப்பிடிக்கலாம், பாம்பு கடிக்கலாம், தபால்வண்டியின் முன்பெட்டியிலுட்கார்ந்திருப்பவனிடத்தில் இவ்வாபத்துகளைச்சொன்னலோ, அவன் "சே,போ" என்று சிரிப்பான். திருடனு? இதோ பார் துப்பாக்கிகுண்டுபோட்டு தயாராய் வைத்திருக்கிறது. துப்பாக்கியை எடுக்க நேரமாகுமென்ருலும், குதிரைசவுக்கிஞல் ஒரு வலுவான அடி கொடுத்தால் அவன் அதைத்துடைத்துக்கொண்டெழுந்திருப்பதற்குள் காததூரம்போய்விடலாம்; அவனை அடித்த சவுக்கின் சப்தத்தைக்கேட்டே குதிரைவெருண்டு பாய்ச்சலில் கிளம்பிவிடும். நெருப்புப்பிடிக்குமென்ருலோ, சுருட்டுக்குடித்தாலொழிய தபால்வண்டியில் நெருப்புப்பிடிக்க வழியில்லை ஆனல் தபால் வண்டியில் சர்க்கார் காகிதங்கள் கொண்டுபோகப்பட்டமையால், இந்த அபாயத்தை நீக்குவதற்காக வண்டியில் யாரும் சுருட்டுக்குடிக்கக்கூடாதென்று சட்டம் ஏற்பட்டிருந்தது. வண்டிக்காரன் மட்டும் எப்பொழுதாவது சுருட்டுக்குடிப்பான். ஆனல் அந்த சாம்பல் எப்பொழுதும் தரையில் தான் விழக்கூடுமேயன்றி வண்டியில் விழ நியாயமில்லை. பக்கத்தில் உட்கார்ந்திருப்பவன் பிராமணனயிருந்தால் அதுகூடக் குடிக்கமாட்டான். ஆனல் எனக்குத்தெரிந்து ஒரே ஒருதடவை தபால்வண்டியில்கூட நெருப்புப்பிடிக்க ஆரம்பித்தது. ஒரு தடவை நான எப்போதும் போல் முன்பெட்டியில் உட்கார்ந்து போய்க்கொண்டிருக்கையில் உள்ளே ஒரு சட்டைக்காரனும் அவன் பெண்சாதியுமாகப் பிரயாணம்செய்தார்கள். மற்ற இரண்டு பேரும் நாட்டுப்புறத்துக் குடியானவர்கள் இந்த சட்டைக்காரன் சுருட்டுக்குடிக்க ஆரம்பித்தான். நான் சுருட்டு நாற்றம் பொறுக்கமாட்டாமல் உள்ளே இருக்கும் குடியானவர்களைப் பார்த்து,, அந்த துரையினிடத்தில் சுருட்டுக்குடித்தல் சட்டத்துக்குவிரோதமென்று சொல்லென்று சொன்னேன். நான் சொன்னதைக்கேட்டு அந்தசட்டைக்காரனும் அவன்பெண்சாதியுமாகசிரித்துவிட்டு இன்னுமதிகமாகப் புகைவிட ஆரம்பித்தார்கள். அவர்கள் குலுங்க நகைத்ததில் ஒரு நெருப்புப்பொறி அந்தத்துரைசானி அம்மாளுடைய பாவாடையில் விழுந்து வண்டிபோகிற காற்றின் வேகத்தினல் ஜ்வாலையுண்டாகிவிட்டது அவர்களிருந்தசந்தோஷத்தில் முதலில் கொஞ்சநேரம் அவர்களுக்கு நெருப்புப்பிடித்ததேதெரியவில்லை. இருவரும் கைகோர்த்துக்கொண்டு நெருங்கியுட்கார்ந்திருந்தமையால் சற்றுநேரத்துக்கெல்லாம் துரையின் சட்டையிலும் நெருப்புப்பற்றி உடம்பிலுறைக்கவே இருவரும் இங்கிலீஷிலேயே கூக்குரலிட்டார்கள், நான் உள்ளே உட்கார்ந்திருந்த குடியானவர்களைப் பார்த்து "வண்டியின் பின்பெட்டியில் குதிரைக்குப்போடுவதற்காகப் புதிதாய் வாங்கின ஈரப்புல்லிருக்கிறதென்று

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடையறியாது.

சொன்னேன். அவர்கள் என் ஜாடையறிந்து துரையையும் துரைசானியையும் தூக்கிப்பின் பெட்டிக்குள்போட்டு மேலே ஈரப்புல்லைப்பரப்பிக் கதவைச்சாற்றி மேலே ஒருவன் உட்கார்ந்து கொண்டான். இதைக்கண்டு வண்டிக்காரன் சற்றுமயங்கவே, நான் பாதகமில்லை வண்டியை ஓட்டு; அந்தநெருப்பு துரை துரைசானி இருவரையும் எரித்து இன்னும் இரண்டு பேரைத்தண்டிக்கொண்டல்லவோ நம்மிடம் வரப்போகிறது. அதற்குள் நாம் ஊர்போய்ச் சேர்ந்துவிடலாம்" என்றேன். (முன்பெட்டியில் உட்காருவது பத்திரமானதென்று இதற்காகத்தான் சொன்னேன்.) அதற்கு உதாரணமாக "யத்யஸ்திபதி சுச்ரூஷா யத்பஸ்தி சரிதம் தப: யதிவாஸ்த்யேகபத்நீத்வம் சீதோபவஹநுமத:" என்று ஹநுமானுடைய வாலில் ராக்ஷசர்கள் நெருப்புக் கொளுத்தியபோது சீதை பிரார்த்தித்த சுலோகத்தை புல்லுக்குள்ளிருக்கும் துரைசானி அம்மாளும் சொல்லிக் கடைத்தேறட்டுமென்று ஒப்புவித்தேன். இதில் 'ஹநூமத:' என்கிற கடைசிவார்த்தை தவிர மற்றொன்றும் வண்டிக்காரனுக்கு அர்த்தமாகாதென்று ஞாபகம் வந்தவுடனே (அவனுடைய படிப்பில் வால்மீகியமான பாகத்தை அவன் பெற்றோர்கள் கவனிக்கவில்லை) அவனுக்கும் தெரியும் பொருட்டு "ஹநுமானுக்கு நெருப்பு சீதளமாயிருக்கட்டும்" என்று வியாக்கியனம் செய்தேன். வண்டிக்காரன் அதற்கொன்றும் பதில் சொல்லவில்லை. என்னெதிரில் யாராவது அரபிபாஷையில் என்னைப்புகழ்ந்தால் நானும்பதில் சொல்லுகிற வழக்கமில்லை. ஆனால் நான் சொன்னதை நம்பாததுபோல் வண்டிக்காரன் புன்னகைகொண்டமையால் "என்னசிரிக்கிறாயே! உன்னிடத்தில் கொடுக்கப்பட்ட பிரயாணிகளின் விவரஜாப்தாவில் ஹநுமான் என்று பெயருள்ளவன் யாருமில்லை என்கிறாயா? வால்மீகி வர்ணித்தபடி ஹநுமானுக்குச் சிவந்தமுகம்; இந்த துரைக்கும் சிவந்தமுகம் ஆகலால் இவரை ஹநுமான் என்று சொல்லததடையென்ன?" என்று சமாதானம் சொன்னேன். இதற்குள்ளாக அடுத்த ஊரும் வந்துவிட்டமையால் கீழே யிறங்கிப்பின் பெட்டியைத்திறந்து பார்க்கையில் துரையையும் துரைசானியையும் சிரைச்சாலைக்குக் கொண்டுபோகிறதா வைத்தியசாலைக்குக்கொண்டுபோகிறதா என்று சந்தேகமுண்டாகிவிட்டது. அவர்கள் வண்டிக்குள் சுருட்டுக் குடித்த சமாசாரத்தைக் கேள்வியுற்ற ஒரு போலீஸ் சேவகன் சிறைச்சாலைக்குத்தான் கொண்டுபோக வேண்டுமென்றான். ஆனால் அவர்கள் உடல் நசுங்கிப்போய் குத்துயிராயிருந்தமையால் நேராக சிறைச்சாலைக்குக் கொண்டுபோனால் சிக்ஷையின் காலம் பூர்த்தியாவதற்குள் இறந்து விட்டாலென்ன செய்கிறது? சுவற்றை வைத்துக்கொண்டல்லவோ சித்திரம் எழுதவேண்டும். ஆதலால் முதலில் வைத்திய சாலைக்குப்போய் உடம்பை சரிப்படுத்திக்கொண்டு அப்புறம் சிறைச்சாலைக்குக்கொண்டுபோகலாமென்று நான் சொன்னேன். அப்படியே அவ்விருவரும் வைத்தியசாலைக்குப் போய்ச்சேர்ந்தார்கள். தபால் வண்டியிலே ஒருக்கால் பாம்புவருமோ என்று சந்தேஹிக்க இடமில்லை. வண்டி ஓடுகிற ஓட்டத்தில் எந்தப்பாம்பாயிருந்தாலும் சக்ரத்திலகப்பட்டு நசுங்கிப்போக வேண்டியதுதான் பரீக்ஷித்மகாராஜாவுக்கு இந்த சங்கதி தெரியாதுபோலும், தெரிந்திருந்தால் அவ்வளவு பணம் செலவழித்து சமுத்திரத்தில் வீடுகட்டினதற்குப்பதிலாக ஒரு ரூபாய் செலவழித்துத் தபால்வண்டிக்கு சீட்டு வாங்கியிருக்கலாம். சூரியசந்திரர்கள் கூட கிரஹணகாலத்தில் தபால் வண்டியில் குடிவந்துவிட்டால் அவர்களுக்குப் பாம்பினால் பயமில்லை.

சர்க்கார் தபால்வண்டியென்றால் அதிலிருக்கப்பட்ட தூசு துரும்புக்குக்கூட சர்க்காருக்குள்ள அதிகாரமெல்லாமுண்டு என்று சாமான்ய ஜனங்களுக்கு ஒரு பீதியிருந்தது. அந்த அதிகாரம் இவ்வளவுதூரம்தான் செல்லும் என்று ஜனங்களுடைய மனதில் தெளிவதாய் வரையறுக்கப்படாமலிருந்தமையால், தபால் வண்டிக்காரனும் அதில்போகும் ஜனங்களும் அவ்வதிகாரத்தை இடங்கொண்ட மட்டும் செலுத்திவந்தார்கள்.

அதிலும் பள்ளிக்கூடத்துப்பிள்ளைகள் உட்கார்ந்திருந்திருக்கிறார்கள் என்றால் பயம் அதிகம். ஏனெனில் வீட்டிலும் பள்ளிக்கூடத்திலும் சாதுவாயிருக்கப்பட்ட பிள்ளைகள் கூட தபால் வண்டியில் ஏறின உடனே விஷ

மத்தன முண்டாகி, முத்துக் கொட்டைச் செடியின் காம்பைத் துப்பாக்கிக் குழாயாகவும் பட்டாணிக்கடலைகளை ரவைதுண்டுகளாகவும் வாயிலடக்கிக்கொண்டு, வழியைமறிக்கும் நாய், வண்டி மாடு, வண்டிக்காரன் முதலியவர்கள் பேரிலும், சிலசமயம் தண்ணீர்க் குடம்கொண்டுபோகும் பெண்பிள்ளைகள் பேரிலும் அக்குழாயின் வழியாய் ஊதுவார்கள். பட்டாணிக்கடலை தானென்றாலும் சேர்ந்தாற்போல் படபடவென்று ஐந்தாறாக விழுந்தால், விழுகிறவேகத்தில் சுருக்கென்று ஊசிகுத்துவதுபோலிருக்கும். தப்பித் தவறிக்கண்ணில் விழுந்தால் கண்போனாலும் போய்விடும். வண்டிக்காரன் ஊதுகொம்பு வாத்தியத்தை முழக்கினவுடனே முன்னால் போகும் வண்டிகளெல்லாம் இதற்கு வழிவிட ஒதுங்கிக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் அவ்வண்டிகளின் பக்கத்தில்போய் மாட்டின் காதில் கொம்பு வாத்தியத்தை ஊதுவானானால் சிலபுதுமாடுகள் வெருண்டு வண்டியைத்தாறுமாறாய் இழுத்துக்கொண்டு ஓட ஆரம்பிக்கும். அல்லது சவுக்கினால் ஆள் மாடு இருவரையும் சேர்த்தடிப்பான். ஆதலால் தபால்வண்டியின் வாத்தியத்தைக்கேட்டவுடனே வழியை அடைத்திருக்கும் சுங்கச்சாவடிக்கதவுகளெல்லாம் திறந்து நிற்கும். முன்னால்போகும் வண்டி எதுவாயிருந்தாலும் ஒதுங்கிவிடும்.

சில சமயம் வண்டிக்காரனும் சாப்பிட்டுவிட்டுக் குதிரைக்கும் தீனிவைத்துவிட்டு வண்டிகட்டினால் கடைத்தெருவழியாகப்போகையில் கும்பல்களைக் கண்டவுடன் கொஞ்சம் உத்ஸாகமுண்டாகித்துள்ளிக் குதிக்க ஆரம்பிக்கும். சில சமயம் மூலைமுடுக்குகள் திரும்புகையில் வழியில் பரப்பியிருக்கும் கத்தரிக்காய்க் கூடைகளைச் சட்னிசெய்துகொண்டும், கோழிமுட்டைகளைச் சடபடவென்று உடைத்துத்தள்ளிக்கொண்டும் போகும். அப்பொழுது கூடைக்காரிகள் வாயில் வந்தபடி திட்டுவார்கள். ஆனால் அவ்வசவுகள் எங்கள் காதில் நுழைவதற்குள் நாங்கள் கண்காணமற்போய் விடுவோம். எனக்குமட்டும் அநியாயமாய் உடைந்துபோனகோழிமுட்டைகளைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கும். ஆனால்தபால்வண்டியிலிருப்பவர்களுக்கு ஊரிலுள்ளவர்களுக்கு நேரும் துக்கத்தையெல்லாம கண்டு அழ சாவகாசமேது? சிரிக்கிறதற்கே சாவகாசமில்லையே! ராஜாங்கவிஷயமான சமாசாரங்களை ராஜ்யத்துக்கு ராஜ்யம் பரவச் செய்யும் கடமையை வகிக்கும் தூதனாகிய தபால்வண்டிக்கு, மணிக்குப் பத்துமைல் போகவேண்டிய அவசரத்தில் வழியிலிருப்பவர்களுக்கு நேரும் ஆபத்து சம்பத்துகளைக் குறித்து துக்கம்கொண்டாடும் கடமையையும் ஏற்றுக்கொள்ள முடியுமா? தவறிப்போய் மனுஷியர்கள்மேல் மிதித்துக்கொண்டுபோனாலும், உலகத்துக்கு இன்றியமையாதபொதுநன்மையைச்செய்துகொண்டுபோகும் தபால்வண்டியின்மேல் ஒரு நாளும் யாதொருகுற்றமும் ஏற்படாது என்பது என் கொள்கை. சர்க்கார் சமாசாரம் போய்ச்சேரவேண்டிய இடத்தில் ஐந்து நிமிஷம் தாமதமாய்ப்போனால் எவ்வளவோ காரியங்கள் கெட்டுப்போகும். அப்பொழுது வண்டியினால் மிதிபட்டவர்கள் உத்திரவாதமாயிருப்பார்களா? கெட்டுப்போன சர்க்கார் காரியத்தைச் சீர்திருத்த இவர்களால் முடியுமா? சர்க்கார்காரியங்களெல்லாம் ராஜ்யத்தின் பொதுநன்மையைக் குறித்த காரியங்களைத் தவிர வேறுண்டோ.

தபால் வண்டி தன்கடமையைத்தீர்த்துக் கொண்டுபோகையில் அதன்மேல் யாதொரு குற்றமும் ஏற்படாது என்று சொன்னதினாலேயே, சர்க்காருக்குள்ள அதிகாரமுழுவதும் அதற்கு முண்டு என்றும் அவ்வதிகாரத்தை எங்கேயும் எப்பொழுது வேண்டுமானாலும்செலுத்தலாம் என்றும் தானே ஏற்படும் இதையறியாத நாட்டுபுறத்து ஜனங்களிடத்தில் இவ்விஷயத்தைச் சொல்லி நான் அவர்களை பிரமிக்கச் செய்திருக்கிறேன். ஒரு தடவை கரூருக்கும் ஈரோடுக்கும்மத்தியில் நான் தபால்வண்டியில் பிரயாணம் செய்கையில் சேலத்திலிருந்து கோயமுத்தூருக்குப் போகிற சொந்தக்குதிரை வண்டி ஒன்று எங்கள் பக்கத்தில் வந்துகொண்டிருந்தது. அந்தக் குதிரை ஜாதியில் டில்லி மட்டம். சொந்தக் குதிரையாதலால் வீட்டில் செல்வமாய் வளர்க்கப்பட்டிருந்தது. வண்டியில் கட்டி அதிகநேரமாகாமையால் குதிரையின் புதுமையான பளபளப்புக்கலையாமலிருந்தது. குதிரைக்கு சொந்தக்காரனேவண்டி ஓட்டிக்கொண்டு வந்தமையால் தன்குதிரையின் சாமார்த்தியத்தைக்காட்டவேண்டிக்கொஞ்சதூரம்

எங்கள் தபால் வண்டியைச்சேர்ந்தாற்போல் பின்னால் ஓட்டிக்கொண்டேவந்தான். தபால்வண்டியின் வேகத்துக்குச்சரியாக சளைக்காமல் வருகிற தென்றாலே சாதாரணக் குதிரைகளுக்கொருபெருமை. அதுபோதாதென்று அக்குதிரைக்காரன் பேராசைகொண்டு எங்களுடன்போட்டிக்கு ஓட்டி எங்கள் குதிரையை ஜயிக்கவேண்டுமென்கிற ராஜதுரோகமான எண்ணங்கொண்டு எங்கள் வண்டிக்கு முன்னால் ஓட்டப்பார்த்தான். ஆனால் எங்கள் குதிரையினிடத்திலுள்ள விசேஷமென்னவென்றால், பின்னால் இதரவண்டிகளுடைய சலங்கைசப்தங்கேட்டாலே தன்னடையைக் கொஞ்சம் துரிதப்படுத்தும், அந்த சப்தம் பக்கத்தில் வந்துவிட்டால் பாய்ச்சலில் கிளம்பிவிடும். ஆனால் எப்பொழுதும் குதிரைக்காரனுக்குக் கீழ்ப்படிந்து அவன் சொன்னபடி கேட்கும். இப்பொழுது பனிரண்டு மைல் ஒன்றேகால் மணியில் ஓடிவந்தவேகத்தினால் கொஞ்சம் வியர்த்து சளைத்திருந்தது. ஆதலால் டில்லி மட்டக்குதிரை பக்கத்தில் வருகிற சமயத்திலெல்லாம் எங்கள் குதிரை அதற்கிடங்கொடுக்காமல் வேகமாய்ப் போய்க்கொண்டிருந்தது. நான் பக்கத்திலுட்கார்ந்திருந்த வண்டிக்காரனைப்பார்த்து "அதைப் பார்த்தாயா?" என்றேன். அவன் ஆம் என்று தலையசைத்துவிட்டு எங்கள் குதிரையைச் சற்று இழுத்துக்கொண்டான். உடனே இதுதான் சமயம் என்று டில்லி மட்டக்குதிரை எங்கள் வண்டிக்கு முன்னால் வெகுவேகமாய்ப்படபடவென்று கோடை மழை பெய்வதுபோல் பாய்ச்சலில் கிளம்பிவிட்டது. நான் அவ்வண்டியை முன்னால் விட்டுவிட்டதற்காக தபால் வண்டிக்காரனைக் கோபித்துக்கொண்டேன். அதற்கவன் "சுவாமி, சந்திரனை ராகுபிடிக்கும்பொழுது பூர்ணசந்திரனாகவிட்டுப் பிடிக்கிறானா, மூன்றாம் பிறையிலேயேபிடிக்கிறானா? அதுபோல் இந்த டில்லி மட்டத்தின் வேகம்தான் எவ்வளவுதூரம் போகிறதென்றுபார்ப்போமே! அதன் முழு வேகத்தையும் அது காண்பித்த பிறகல்லவோ நாம்அதைநசுக்கவேண்டும்!' என்றான். அப்படியே அவ்வண்டி எங்கள் கண்ணுக்குத்தெரியாமல் சாந்துப்பொட்டினளவாகப் போய் மறைகிறசமயத்தில் "சல்சோட்பாய்" என்று கடிவாளத்தைத்தளர்த்தினான். ஏற்கனவே எங்கள் குதிரையும் தன் ரோஷத்தைத்தன் யஜமானனுக்காகப்பயந்து அடக்கிக்கொண்டிருந்தமையால், மானைத்துரத்தும் வேட்டைநாய்போல் கிளம்பி ஐந்தே நிமிஷத்தில் அந்தடில்லி மட்டத்தைத்தாண்டி எங்கள் வண்டிக்காரன் பம்பம்என்று கொம்புவாத்தியத்தை ஊதவே இன்னொரு ஐந்து நிமிஷத்தில் அது இருக்கிற இடம் கண்ணுக்குத்தெரியாதபடி பின்னால் விட்டுவிட்டது. பதின்மூன் றுமைல் ஓடிவந்த பிறகு இவ்வளவு சக்தியை அது எந்த மூலையில் ஒளித்து வைத்திருந்ததென்று எனக்கே ஆச்சரியமாயிருந்தது. இந்த ஜயமடைவதற்காக அபூர்வசிரமப்பட்டதாகத் தோற்றவேயில்லை. குதிரைக்கு இரைக்கவுமில்லை, நுரைக்கவுமில்லை. ஆதலால் "நாம் பரோபகாரமான காரியத்தைச்செய்கிறோம். இதில் நம்மை யாவரும் அவமானப் படுத்தமுடியாது" என்கிற தைரியம் எங்கள் குதிரைக்கும் பரவியிருந்ததென்று தோற்றுகிறது. அந்த டில்லி மட்டக்காரனுக்கு நாங்கள் முன்னால் போனவுடனே வண்டிக்காரன் ஊதினவாத்தியத்தைக்கேட்டவுடன் தன்னைப்பரிகாசம்செய்கிறதற்காக ஊதுகிறான் என்று நன்றாய்த்தெரிந்திருக்கும் என்பதற்கு சந்தேகமில்லை.

இந்தக் கதையைப் பின்வரும் சங்கதியை உத்தேசித்துச்சொல்ல ஆரம்பித்தேன். எனக்குப் பின்னால் தபால்வண்டியில் உட்கார்ந்திருந்த ஒரு குடியானவன், "இந்தப் பந்தயம் ஓடுகையில் உங்கள் உடம்பில் ரத்தம்கொதிக்கவில்லையா?" என்று கேட்டான். நான் "வேதாந்தியாயிருப்பவனுக்குக் கொதிப்பேது? மேலும் நாம் நமக்கு சமானமான இன்னொருசர்க்கார் தபால்வண்டியுடன் போட்டிபோட்டால் அல்லவோ ஜயாபஜயத்தைப்பற்றிக் கவலைப்படவேண்டும், ஜயித்தாலும் கீர்த்தியுண்டு தோற்றாலும் அவமானமுண்டு. நமக்குக்கீழ்ப்பட்டதானசொந்தவண்டியோடுபோட்டிபோடுவதில் இரண்டுமில்லை. அந்த டில்லிமட்டம் நமக்குப் பின்னால் வந்து கொண்டிராமல் நம்முடன் போட்டிக்கு கிளம்பினதே அதன்பேரில் ஒருகுற்றம்என்றேன். அதற்கவன் "அதெப்படி? ராஜன்மகளாயிருந்தாலும் முகத்தைத்திறந்துகொண்டு தெருவில் போனால் எல்லாரும்தான் பார்ப்பார்கள்" என்றான், நான் "இருந்தாலும் இரண்டுமூன்

றுதரம் வெளிக்கப்பார்த்தால் குற்றமல்லவா? தொட்டுவிட்டால் கேட்கவேவேண்டியதில்லை. அதுபோல நம்முடன் கூடவந்தது போனால் போகட்டுமென்றாலும் நம்முடன் போட்டிபோட ஆரம்பித்தது குற்றம், அதிலும் நம்மை ஜயித்து விட்டாலோ மரணதண்டனை விதிக்கக்கூடிய பெருங்குற்றம்" என்று இந்தியா சட்டதிட்டங்களில் 1875-ம் வருஷத்திய நாலாவது சட்டத்தில் ஆறுவது உட்பிரிவைப் படித்துப்பார்க்கச்சொன்னேன். நான்சொன்னதை நம்பாததுபோல் அவன் மயங்கினமையால் அவனுக்கு ஒரு உதாரணம் சொன்னேன். என்னவெனில் முன் இத்தேசத்தை ஆக்பர்சக்கிரவர்த்தி அரசாண்டகாலத்தில் அவர் தன் பிரபுக்கள் பரிவாரங்களுடன் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பக்ஷிகளைப்பறக்க விட்டுவேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கையில், சக்கிரவர்த்தியின் ராஜாளி பக்ஷியைக்காட்டிலிருந்து வந்த ஒரு வல்லூறு எதிர்த்துப் போராடி திடீரென்று கொத்திக் கொன்று விட்டது. எல்லோரும் பிரமித்து மூக்கினமேல் விரலைவைத்து ஆச்சரியப்பட்டார்கள். உடனே சக்கிரவர்த்தி அவர்கள் வேடர்களைக்கொண்டு அவ்வல்லூறைப் பிடித்துவரச்சொல்லி அதைக்கொஞ்சிக் குலாவி முத்தமிட்டு அதன் தைரியத்திற்காகவும் பராக்கிரமத்திற்காகவும் மெச்சி அதன்தலையில் கிரீடம் வைத்து அதற்குமுத்துமாலை புஷ்பமாலையெல்லாம் போட்டுக் கடசியில் அதைத் தூக்குப்போட்டுவிடும்படி உத்தரவு செய்தார். அதை அநுசரித்துத்தான் மேற்சொன்னசட்டமும் ஏற்பட்டது. "ஆகலால் இவ்வளவு அழகான டில்லிமட்டக் குதிரையை அதன்கழுத்தில் பூமாலைகளும் தலையில் கிரீடமும்வைத்து கடைசியில்காவுகொடுக்கப்படும் ஆட்டுக்கடாவைப்போல் தூக்குமேடைக்குக் கொண்டு போவதைப்பார்க்க நமக்குமனம் வருமா? அதனால்தான் அக்குதிரையின் க்ஷேமத்தை உத்தேசித்தே அது ஜயிக்காமலிருந்தது நல்லதுதானென்றேன்" என்று சொன்னேன். அந்தகுடியானவன் "எங்கள் வக்கில் ஐயாவைக் கேட்கவேண்டும்" என்று முணுமுணுத்துக்கொண்டு போய்ச்சேர்ந்தான்.

(இன்னுவரும்)

தாலூகா குமாஸ்தா.

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE)

## ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

---

### ஐந்தாவது அங்கம்.

காக்ஷி. 2

ஒன்றுங்குறைவு இல்லை. இனி இவனிக்கு சாக வேண்டியது தான்பாக்கி. அது வரையில் தனக்குச் செய்துகொள்ள வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்து கொண்டுவிட்டான்.

ஆஸரிகன் :—தங்களுக்கு சாவகாசப்பட்டால், ராணு அவர்கள் ஒரு சமாசாரம் சொல்லியனுப்பினார், அதைத்தங்களிடத்தில் தெரிவிக்கலாமா?

ஹேமசந் :—அதென்னவோ, ராணு அவர்கள் சம்மதத்தைக் கேட்டுக்கொண்டு வாருங்கள்.

ஆஸ :—ராணு அவர்கள் தங்களிடத்தில் தெரிவிக்கத்தான் சொன்னார்.

ஹேமசந் :—அப்படியானால் யோசனையென்ன? சொல்லுங்கள். வணக்கமாய் கவனித்துக் கேட்கிறேன். தலைப்பாகையைத் தலையில் வைத்துக்கொள்ளலாமே! கைப்பாகையல்லவே அது!

ஆஸ :—இல்லை, அதிக புழுக்கமாயிருக்கிறது, மன்னிக்கவேண்டும்.

ஹேமசந் :—இல்லையே, ரொம்ப குளிராக இருக்கிறதே! வட சாற்றடிக்கிறதே! இப்பொழுது எது புழுக்கம்?

ஆஸ்ா :—ஆம், நேற்றைக்கு இன்று கொஞ்சம் குளிர்தான். இருந்தாலும்,—

ஹேமசந் :—இருந்தாலும்எனக்குமட்டும் என்னவோ வியர்வையாகத்தானிருக்கிறது!

ஆஸ்ா :—ஆமாம், சுவாமி! எனக்குக்கூட அப்படித்தானிருக்கிறது. குளிர் காலம் தான் இது, இருந்தாலும் புழுக்கமாக இருக்கிறது; ஏனோ காரணம் சொல்லத்தெரியவில்லை—ஆனால் ராணு அவர்கள் சொன்ன தென்னவென்றால் தங்கள்பேரில் ஒரு பெரிய பந்தயம் வைத்திருக்கிறாராம்.

ஹேமசந் :—அப்படியா, என்பேரில் அப்படியொன்றையுங்காணேமே! நீங்களே வேண்டு மானாலும் தடவிப்பாருங்கள்.—

ஆஸ்ா :—சங்கதி இது தான்,—

ஹேமசந் :—தலைப்பாகையைத்தலையில் வைத்துக்கொண்டு சொல்லலாமா!

ஆஸ்ா :—இல்லை, எனக்குக்கொஞ்சம் தலைவலி. இப்பொழுதுராஜசபைக்குலக்ஷ்மணவிங் புதிதாய் வந்திருக்கிறார். நல்ல சமார்த்தியசாலி! சிறுபிள்ளையாண்டான், நல்ல சகவாசங்கள், பெரிய மனுஷியாளுடைய பரிச்சயங்களுண்டு, எல்லாவித்தையிலும் தேர்ந்தவர், சிநேகத்துக்கு நல்ல பாத்திரம், எல்லா மரியாதையுந் தெரிந்தவர்!—அதிகமாக விஸ்தரிப்பானேன்? சும்மா சொல்லக்கூடாது, மனுஷயனுக்கு என்ன என்ன தெரியவேண்டுமோ, எல்லாம் இனிஅவரிடத்திலிருந்துகற்றுக்கொள்ளவேண்டும்.

ஹேமசந் :—அப்படியா! உங்கள் வர்ணனையைக் கேட்கும்போதேநேத்திரானந்தமாயிருக்கிறதே, வஸ்துத: நேரிட தரிசித்தால் என்னகர்ண மிருதமாயிருக்குமோ தெரியவில்லையே! எனக்கும் கிஞ்சித் அவருடைய ஸம்பர்க்கமுண்டு—எனக்குத்தெரிந்தவரையில் நீங்கள் சொன்னதில் ஒரு அக்ஷரங்கூட அபத்தமில்லை. அவருடைய குணதிசயங்களைக்கணிக்கிறதென்றால் ஆதிசேஷனுக்குக்கூட நாக்கு சோஷித்துப்போம். ஸரஸ்வதியே நேரில் வந்து அவனை ஸ்தோத்திரம் செய்யயத்தனித்தாலும்அந்தஸ்தோத்திரங்களுடைய கோசரத்துக்கு மேலாயிருக்கிறது அவருடைய லக்ஷணங்கள்—யதார்த்தமாகவே நல்லசத்பாத்திரம், கனமானவஸ்து, அபூர்வபதார்த்தம். அவருக்கு ஸமதை அவருடையசாயைதான்.

ஆஸ்ா :—தாங்கள் சொல்லுகிறது நிராக்ஷேபமாயிருக்கிறது.

ஹேமசந் :—மேலேவிஷயசம்பந்தத்தைப்பூர்த்தி செய்யுங்கள். நம்முடைய அல்பவாக்கினாலே அவருடைய அபாரசிரேயஸை ஆலாபம் செய்வானேன்.

ஆஸ்ா :—என்ன சுவாமி?

ஹரிராஜ :—எனக்கும் கொஞ்சம் விளங்கும்படி பேசக்கூடாதா? நீங்களிருவர்மட்டுந்தானா பேசிக்கொள்ளுகிறது?

ஹேமசந் :—அவருடையநாமதேயம்இப்பொழுது பிரஸ்தாபத்தில் வந்தசம்பந்த மென்னவென்று விக்ஞாபிக்கலரமே!

ஆஸ்ா :—யார்? லக்ஷ்மணவிங்கா?

ஹரிராஜ :—ஓகோ சோ! இவருடைய அபூர்வ பதங்களுடைய பொக்கிஷம் சூன்யமாகிவிட்டது! வசதாரித்திரியம் வந்து விட்டது இவருக்கு.

ஹேமசந் :—ஆம், அவரைத்தான்.

ஆஸ்ா :—தங்களுக்கே, தெரிந்திருக்கலாமே இது விஷயம்,—

ஹேமசந் :—எனக்குத் தெரியாதென்றுஉங்களுக்குதெரிந்திருக்கலாமே! இருந்தாலும் என்னுடைய அறியாமையை நானே வெளியிட்டுக்கொள்வானேன்? மேலே சொல்லுங்கள்.

ஆஸ்ா :—லக்ஷ்மணவிங்கின் திறமை தங்களுக்குத் தெரியாதா?

ஹேமசந் :—ஐயா எனக்குப் பிறர் திறமையைப் பற்றித்தெரியாது. எனக்குத் தெளிவாய்த்தெரிவது என் மடமைதான்!

ஆஸ்ா :—இல்லை சுவாமி, ஆயுதப்பிரயோகத்தில் அவர் திறமையைப் பற்றிச்சொல்லவந்தேன்! அதில் அவருக்கு சமானம் யாருமில்லை என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

ஹேமசந் :—எது அவருடைய முக்கிய ஆயுதம்?

ஆஸ்ா :—குருத்தோலைக் கத்தியும், மான் கொம்பும்.

ஹேமசந் :—அப்படியானால் இரண்டாயுதங்களாச்சுது. அப்புறம் மேலென்ன?

ஆஸ்ா :—அவரோடு யுத்தத்தில் தாங்கள் அடஜயமடைந்தால் ராணு அவர்கள் 50 குதிரைகள் கொடுத்துவிடுகிறதாயும், தாங்கள்ஜயித்தால்லக்ஷ்மணவிங் நாலுபனரிஸ்பட்டுகளும்ஆறு காச்மீரசால்வைகளும் இரண்டு பட்டாக்கத்திகளும் தான் மேலேபோட்டுக்கொள்ளுகிறசங்கலி கவசமும் கொடுத்துவிடுகிறதென்றும் உடன்படிக்கை. அந்தக்கத்திகள் இரண்டும் வெகு அழகாயிருக்கின்றன. நல்ல எஃகுவேலை. அவைகளுடைய வாகனங்கள் நல்ல நகாசுவேலை செய்யப்பட்டு வெகுமனோஹரமாயிருக்கின்றன.

ஹேமசந் :—வாகனங்களாவது யாவை?

ஹரிராஜ :—இவரோடு பேசிமுடிவதற்குள் தங்களுக்கு வியாக்கியானம் வேண்டியிருக்குமென்று எனக்குத்தெரியும்.

ஆஸ்ா :—வாகனங்களாவது "பிடிகள்!" கத்திகளை வகிக்கின்றமையால் அந்தப்பெயர்.

ஹேமசந் :—கத்திகள் குதிரை ஏறுகிறவரையில் அந்தப் பெயர்வேண்டாம். பிடிகள் என்றே சொல்லலாம்; பாதகமில்லை. 50 குதிரைகளுக்கீடாக நாலு பட்டு வஸ்திரங்களும் ஆறுசால்வைகளும் ஒரு கவசமும் இரண்டுகத்திகளுமா? நல்லது, இவ்வளவுதானு உடன்படிக்கை?

ஆஸா :—பனிரண்டுதடவை ஒருவரையொருவர் எதிர்ப்பதில் தங்களுக்கு மூன்று தடவைக்குமேல் காயம்பட்டால் தாங்கள் தோல்வியடைவீர்கள். அவருக்கு ஒரு காயம்பட்டாலும் அவர் தோற்றவர்தான் தாங்கள் சம்மதித்தால் அவர்கள் எல்லோரும் இப். பொழுதே வந்துவிடுவார்கள்.

ஹேமசந் :—நான் சம்மதிக்காவிட்டாலோ?

ஆஸா :—சம்மதிக்காவிட்டால் தாங்கள் தோற்றதாக அர்த்தம்.

ஹேமசந் :—அப்படியே இருக்கட்டுமே.

ஆஸா :—அப்பவும் வைத்த பந்தயத்தைக்கொடுத்து விடவேண்டியதுதான்.

ஹேமசந்:—அப்பிடியானல்—நான் தேகப்பயிற்சி செய்கிறவேளைதானிது, இங்கேயே சாயந்திரவெயிலும் பசும்புற்றரையும்அழகாய அமைந்திருக்கிறது—அவர்களும் இன்னும் அதேஅபிப்பிராயமாகஇருந்து எனக்கும் திறமையிருந்தால் தெரிந்தமட்டும் விளையாடுகிறேன்-இல்லாவிட்டால் காயத்தையும் அவமானத்தையும்நான்வாங்கிக் கொள்ளுகிறேன்.

ஆஸா :—அந்தப்படியே ராஜ அவர்களிடத்தில் தெரிவித்துவிடவா?

ஹேமசந் :—ஆம், தாத்பரியம்அதாயிருக்கட்டும். மேலே அலங்காரதோரணைகள் நீங்கள் எது சேர்த்துக்கொண்டாலும் சரி.

ஆஸா :—நமஸ்காரம்.

ஹேமசந் :—அப்படியே. (ஆஸாரிகன்போய் விடுகிறன்) நல்லவேளையாய் இவனுடைய சமாசாரத்தை இவனே சொல்லவந்தானே பிறர்யாருக்கும் இந்த மாதிரி பேசவாராது.

ஹரிராஜ :—அதோசிட்டாகப்பறந்து போய்விட்டான் தங்கள் பதிலைத்தெரிவிக்க.

ஹேமசந் :—இவன் குழந்தையாயிருக்கையில் தாயினிடத்தில் பால் குடிக்கும்போதுகூட அம்மா தயவுசெய்து எனக்குக்கொஞ்சம் தங்களிடத்தில் பால் குடிக்க அனுமதிகொடுப்பீர்களானல் மிக்க வந்தனமுள்ளவனயிருப்பேன் " என்று கேட்டிருப்பான். இந்தமாதிரிதான் இவனைப்போலொத்தவர்கள் ஏதாவது இரண்டு புதிய உபசார வார்த்தைகளைக் கற்றுக்கொண்டு கூழைக் கும்பிடுபோட்டுவிட்டு பொதுவாய் " வெகு நல்லவர், வெகு வித்வான் வெகு புத்திசாலி " என்று ஜனங்களிடத்தில் பெயர்வாங்கிவிடுகிறர்கள். எதில் நல்லவர்? எதில் வித்வான்? எதில்புத்திசாலி? என்றல் தெரியாது. ஆளைமடக்கிக்கொண்டு இரண்டு வார்த்தைகளுக்கு நாலு வார்த்தையாய்த்திருப்பினலோ அப்புறம் பேச்சு மூச்சிராது.

(ஒரு பிரபு வருகிறன்).

பிரபு :—சுவாமி, இப்பொழுது ஆஸாரிகன் ராஜ அவர்களிடத்தில் சொன்னதில், தாங்கள் லக்ஷ்மணஸிங்கோடு கத்திவிளையாட சம்மதித்ததாகச்சொன்னர். தங்கள் அபிப்பிராயம் மாருதிருந்தால் இப்பொழுதே ஆரம்பிக்கலாமா சற்றுப்போகலாமா, என்று ராஜ அவர்கள் என்னைத்தெரிந்துவரச்சொன்னர்கள்.

ஹேமசந் :—என் அபிப்பிராயம் எப்பொழுதும் ஒன்றுதான். அது மறக்க காரணமில்லையே? அவர்களைப்போலொத்த பெரியமனுஷியாளுக்குத்தான் ராஜாவினுடைய அபிப்பிராயத்தைப்போல் தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவேண்டும். அவர்கள் தயாராயிருந்தால் நானும் காத்துக்கொண்டிருக்கிறேன். இப்பொழுதானலும் சரி, எப்பொழுதானலும் சரி, நான் இதே தேகஸ்திதியில் மட்டுமிருந்தால்.

பிரபு :—அப்படியானல் ராஜவும் ராணியும் இதோ புறப்பட்டு வருவார்கள்.

ஹேமசந் :—சந்தோஷம்.

பிரபு :—விளையாட ஆரம்பிப்பதற்கு முன் லக்ஷ்மணஸிங்கினிடத்தில் தாங்கள் நல்ல வார்த்தையாகப் பேசி சமாதானப்படுத்தி அவரோடு எப்போதும்போல் சிநேகமாகிவிடும்படி ராணி அவர்கள் தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறர்கள்.

ஹேமசந் ;—நியாயமான விஷயம். நல்ல சமயத்தில் ஞாபகப்படுத்தினர்கள்.

(பிரபு போய்விடுகிறன்).

ஹரிராஜ:—தாங்கள் தோல்வியடைவீர்களென்று பயப்படுகிறேன்.

ஹேமசந் :—பயமென்ன? அதனல் நம்முடைய கியாதி குறைந்துபோமா? கிரீடம் நழுவிப்போமா? என்னவோ சற்று விளையாடச்சொன்னல் விளையாடுவோமே? சக்கிரம் அறுக்கிறது கபாலம் எங்குகிறது! நமக்கென்ன? இருந்தாலும் நானும் என் பழைய தேகாப்பியாசங்களை மறந்துவிடவில்லை. இப்பொழுதுகூட சமீபத்தில் காட்டுராஜனேடு கொஞ்சம் விளையாடி சில புதுவரிசைகள் கற்றுக்கொண்டேன். இருந்தாலும் என் சிற்றப்பன் வார்த்தையில் எனக்குக் நம்பிக்கைகொடுக்கவில்லை. நேற்று ராத்திரி நான் அவனை விட்டுவிட்டது பிசகு என்று தோன்றுகிறது.

ஹரிராஜ :—உங்கள் மனதிற்கேற்க கொஞ்சம் அவநம்பிக்கையாயிருந்தாலும்விளையாடவேண்டாம். நான் வேண்டுமானல் தங்களுக்கு உடம்பு சௌகரியமில்லை என்று அவர்கள் வரவைத்தடுத்து விடுகிறேன்.

ஹேமசந் :—அப்படி யொன்றுமில்லை. நாமென்ன பெண்பிள்ளைகளா ?

ஹரிராஜ:—அப்படியல்ல-மனதில் களங்கம் தொன்றினல் அந்தவேலையைச் செய்யவேண்டாமென்று சொன்னேன்.

ஹேமசந் :—அதெல்லாம்போய் எந்தக்காலமாச்சுது. இப்பொழுது அதெல்லாம் பழங்கதையாகிவிட்டது. இப்பொழுது எந்த வேலையும் பரிசுத்தமான வேலைதான், எல்லா மனுஷியர்களும் நல்லவர்கள் தான்-எல்லாதினமும் சுதினம் தான். ஒருகாரியத்துக்கும் சகுனம் பார்க்கவேண்டியதில்லை. இந்த ஸந்தியாதேவியின் சாந்தமே சாந்தம். இந்த மாதிரி வேலையில்தான் நம் கண்ணை மறைத்தமாயை எவ்வளவ துச்சம் எவ்வளவு அல்ப தூசி என்று நன்ருய்த் தெரிகிறது. நம்முடைய சங்கல்பம்மட்டும் உறுதியாயும் சத்சங்கல்பமாயு மிருக்கவேண்டியது. அப்புறம் அது தானுகவே காலக்கிரமத்தில் பலனைக்கொடுக்கிறது. பலன் கிடைக்கிறவரையில் மட்டும் பொறுமையோடு தூங்காமல் விழித்துக்கொண்டிருக்கவேண்டும். நாம் செய்யவேண்டியது அவ்வளவுதான். நம்மைத்திரும்பி வந்துவிடும்படி எந்த நிமிஷத்தில் கூப்பிட்டாலும் புறப்படத்தயாராயிருக்கவேண்டும்-நமக்கிட்ட வேலைமுடிந்தாலும். முடியாவிட்டாலும் நமக்கென்ன ? நாம் கொண்டதென்ன கொடுத்ததென்ன ? வரும்பொழுது என்ன கொண்டுவந்தோம் ? போகும்போழுது என்ன கொண்டுபோகிறோம் ?

(ராணு ...ணி, லக்ஷ்மணஸிங், ஆஸ...ரிகன், பிரபுக்கள், சேவர்கள் எல்லோரும் வருகிருர்கள்.)

ராணு :—வா அப்பா ஹேமசந்திரா, என்னிடமிருந்து இவர் கையைப்பிடித்து உன் கையிற்கோர்த்துக்கொள்.

(லக்ஷ்மணஸிங், ஹேமசந்திரஸிங், இருவருடைய கைகளையும் பிடித்துச் சேர்க்கவைக்கிருன்).

ஹேமசந் :—ஐயா, நான் உங்களுக்கு அபராதம் செய்துவிட்டேன் ; நீங்கள் நல்ல வரானபடியால் என்னை மன்னிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்-நான் சிலநாட்களாக புத்திகலங்கி சித்த சுவாதீனமில்லாமல் தடுமாறுகிறேன் என்பது இவ்விடத்துக்கும் தெரியும், நீங்களும் கேள்விப்படிருப்பீர்கள். உங்களுக்கு மனஸ்தாபமுண்டாகும்படியாவது, அவமரியாதையாயாவது, துக்குமுண்டாகும்படியாவது, துன்பப்படுத்தும்படியாவது நான்எது செய்திருந்தபோதிலும் அதெல்லாம் என்னுடைய பைத்தியத்தின் செயலென்று நான் இங்கேஎல்லோரெதிராகவும் ஏப்புக்கொள்ளுகிறேன். லக்ஷ்மணஸிங்குக்குத் தீங்கிழைத்தது ஹேமசந்திரனு ? அல்ல : ஹேமசந்திரனுடைய உண்மையான சுபாவத்தைக் கெடுத்து அவனுக்கும் தீங்கிழைக்கிற அவனுடைய பைத்தியம். அந்தப்பைத்தியம் அவனையும் கெடுக்கிறபடியுறல் அது அவனுக்கும் சத்துருவே. என் சத்துரு செய்த காரியத்துக்காக என்பேரில் கோபிச்கலாமா ? பைத்தியம் இருந்தால், ஹேமசந்திரன் இல்லை, ஹேமசந்திரன் இருந்தால் பைத்தியமில்லை. நான் உங்களுக்குச் செய்திருக்கும் தீங்கெல்லாம் மாங்காயின்பேரிலெறிந்த கல் குருவிக்கூட்டைக் கலைத்ததுபோலவே யன்றி வேறல்ல. ஆதலால் என்னை ஒரு துர்ப்பாக்கியசாலியான சகோதரனுக பாவித்து மன்னிக்கவேண்டும்.

லக்ஷ்மண :—நீங்கள் வேண்டுமென்று செய்யவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதற்காக உங்கள்பேரிலிருந்த கோபத்தை விட்டுவிட்டேன்-நீங்கள் சொல்வதெல்லாம் உண்மையென்று நம்பி நான் உங்களை என் அந்தரங்கத்தில் மன்னித்தபோதிலும், உலகநடவடிக்கையை யொட்டி ஒவ்வொருவனும் தன் மரியாதையைக்சாப்பாற்றிக்கொள்ள வேண்டியயிருக்கிறபடியால், மரியாதை தெரிந்தபெரியோர்களாக நாலுபேர் பார்த்து இந்த மாதிரி விஷயங்களில் நான் உங்களோடு சமாதானமாகப்போகலாம், போகிற சம்பிரதாயமுண்டென்று சொன்னலொழிய, நான் உங்களோடு சிநேகமாகிவிடுவது எனக்கழகாயிராது. அது வரையில் நாமிருவரும் பார்வைக்கு விரோதிகளாகவே யிருப்போம்

ஹேமசந் :—இருந்தாலும் இந்தக்கத்தி விளையாட்டில் நம்மிருவருக்கும் அந்தரங்கவிரோதமில்லையே ?

லக்ஷ்மண :—அதொன்று மில்லை.

ஹேமசந் :—ரோம்ப வந்தனம்-எங்கே ஐயா, கத்திகளைக்கொண்டு வாருங்கள் என்னிடத்தில் ஏதாவது ஒன்று கொடுங்கள்.

லக்ஷ்மண :—எனக்கும் ஒன்று கொடுங்கள்.

ஹேமசந் :—என்னுடைய திறமையின் மைக்குவத்தியில் அமாவாசை யிருட்டில் தீவட்டி வெளிச்சம்போல் உங்கள் சமார்த்தியம் விளங்கும்.

லக்ஷ்மண :—என்னைப்பரிஹஸிக்கிறீர்களா ?

ஹேமசந் :—இல்லை, யதார்த்தமாகவே சொல்லுகிறேன்,

ராணு :—ஏனையா ஆஸ...ரிக ; அவர்களுக்குக் கத்தியைக கொடுங்கள் நேரமாகிறது-ஹேமசந்திரா, பந்தயம் தெரியுமல்லவோ ?

ஹேமசந் :—தெரியும்-அவருக்கு ஒரு காயத்துக்கு மட்டும் அனுமதிகொடுத்து எனக்கு மட்டும் மூன்று காயத்துக்கு அனுமதிகொடுத்தது தங்களுடைய தயவுதான்.

ராணு :—இருந்தாலும் அவன் தேர்ந்தகையல்லவா ? முனை மழுக்கிய கத்திகள்தான்-பாதகமில்லை,

லக்ஷ்மண :—இது ரொம்ப கனமாயிருக்கிறது. இப்படி காட்டுங்கள் வேறு கத்தி எடுத்துக்கொள்ளுகின்றே,

ஹேமசந் :—எனக்கு இதுவே போதும்-எல்லா கத்திகளும் ஒரே மாதிரி வேலைப்பாடுதான்போலிருக்கிறதே?

ஆஸ்ரீ :—ஆம், சுவாமி, (விளையாட ஸங்நத்தம் செய்கிறார்கள்).

ராஜ :—யாரையா அங்கே ; ஷர்பத்துக்களையும் மதுவர்க்கங்களையும் இப்படி மேசைமேல் கொண்டு வந்து வைக்கச்சொல்லுங்கள் லக்ஷ்மணவின் முதலில் காயமடைந்தாலும் சரி, ஹேமசந்திரனுக்கு பனிரண்டு சுற்று முடிவதற்குள் மூன்றாவது காயத்துக்குமேல் படாமல் போனாலும் சரி, உடனே பேரிகை முழக்கட்டும்- பீரங்கி வெடிகள் தீர்க்கப்படட்டும்- நாமும் நம்முடைய விருந்தாடிகளும் சந்தோஷமாக மதுபானம் செய்வோம்-பாண்டியநாட்டிலிருந்து வரவழைத்த விலையற்ற இந்த புருமுட்டை முத்துமாலையை நம்மகன் கழுத்தில் போட்டு, மாதுளை, கிச்சிலி, முதலிய பலவகைப் பழங்கள் சேர்த்த இந்தஷர்பத்தை அவனுக்கு தாகசாந்தியாகக் கொடுக்க வெண்டும்-இந்த சந்தோஷத்தை வாத்தியங்கள் ஊருக்குச்செல்ல ஊரிலுள்ள பீரங்கிகள் ஆகாசத்துக்குச்சொல்ல, ஆகாசத்திலுள்ள மேகங்கள், சட்டிலுள்ள ஸிம்ஹங்களுக்குச்சொல்ல, சிம்ஹங்கள் மலையிலுள்ள குகைகளுக்குச்சொல்லி உலகெங்கும் இந்தத்துவனி வியாபிக்கட்டும்-மத்தியஸ்தர்கள் ஆட்டத்தைக்கவனித்து பாருங்கள்.

ஹேமசந் :—வாருங்களையா !

லக்ஷ்மண :—இதோ சுவாமி! (விளையாடுகிறார்கள்).

ஹேமசந் :—அதோ பார் ஒரு அடி.

லக்ஷ்மண :—எங்கே, பார்ப்போம்!

ஹேமசந் :—அதோ, விழவில்லையா ?

லக்ஷ்மண :—இல்லை.

ஹேமசந் :—யரையா, மத்தியஸ்தம்.

ஆஸ்ரீ :—உங்கள் கைபட்டதே யொழிய கத்தி படவில்லை.

ஹேமசந் :—நல்லது இன்னொருதரம்.

லக்ஷ்மண :—இவன் இவ்வளவு விளையாடுவானென்று நான் நினைக்கவில்லை.

ஹேமசந் :—இதோ, இந்தத்தடவை என்ன சொல்லுங்கள்.

லக்ஷ்மண :—கத்திமேலேபட்டது. ஆனால் உரைந்துகொண்டு போய்விட்டதே யொழியகுத்தவில்லை.

ஹேமசந் :—என்னஐயா அப்படிதானா?

ஆஸ்ரீ :—ஆம்.

ராஜ :—நம்மகன் ஜயித்து விட்டான். ஜோதி, ஹேமசந்திரா இந்தா முத்துமாலை-பிரபுக்களே எல்லாரும் மதுபானம் செய்யுங்கள்—இதோநானும் ஒரு கிண்ணம் எடுத்துக்கொள்ளுகிறேன்.

(வாத்தியகோழமும் பீரங்கிவெடிகளும் சப்திக்கின்றன).

ஹேமசந்திரனுக்கு இந்தஷர்பத்தைக்மொடுங்கள்.

ஹேமசந் :—சற்றுப் பொருங்கள்--இன்னொருமூச்சு ஆகட்டும்-

ராணி:—அவனுக்கு மூச்சுதாங்கவில்லை-வியர்க்கிறது-இங்கேவா குழந்தாய், இந்த உருமாலையினால் துடைத்துக்கொள்-நீஜயித்ததற்காக நானும் கொஞ்சம் ஷர்பத் சாபபிடுகிறேன்.

ராஜ:—அது அவனுக்காக வைத்திருக்கிறேன் அதைத்தொடாதே!

ராணி :—அவனுக்கானாலென்ன? எனக்கானாலென்ன? நான்மாதரிபார்த்துவிட்டு என்கையாலேயே அவனுக்குக்கொடுக்கிறென்-மன்னிக்கவேண்டும்.

(என்றுஷர்பத்தைசாப்பிடுகிறாள்).

ஹேமசந் :—எனக்கிப்போது அவசரமில்லை அம்மா, சற்றுபொருங்கள்.

ராஜ :—(தாங்கள்) அது விஷயம் கலந்த சர்பத் தாயின்றே! இனிஎன்ன செய்கிறது? யாரிடத்தில் சொல்லுகிறதுகிருஷ்ணார்பணம்! கெடுவான் கேடு நினைப்பான்.

லக்ஷ்மண :—வாருங்கள் இன்னொரு மூச்சு-(தனக்குள்) இருந்தாலும் இவ்வளவு நிஷ்கபடமானவனைக்கொல்ல மனசு துணியவில்லை.

ஹேமசந் :—நீங்கள் உங்கள் முழுசாமார்த்தியத்தையும் காண்பிக்க வில்லை-காண்பித்தால் நான்இன்னேரம் எதிர்நிற்க முடியுமா?

லக்ஷ்மண் :—இந்தத்தடவை பாருங்கள்-

ஆஸ்ரீ :—எங்கே, ஒன்றையுங்காணோமே!

லக்ஷ்மண:—அதோபார்த்துக்கொள் (லக்ஷ்மணவின்ஹேமசந்திரனைக்குத்துகிறான்).

ஹேமசந் :—ஒன்று ஒப்புக்கொண்டேன்-இன்னும் இரண்டு!

லக்ஷ்மண :—இன்னும் வேண்டுமா?

ஹேமசந் :—பந்தயப்படி நடகட்டுமே.

லக்ஷ்மண :—சரி சம்மதம் நெருங்கி விளையாடுகையில் இருவரும் ஒருவர்கத்தியை ஒருவர் மாற்றிக்கொண்டு விடுகிறார்கள்.

ஹேமசந் :—இதோ பதிலுக்குக்கொடுத்தேன். (ஹேமசந்திரன் லக்ஷ்மணவின்கைக் குத்துகிறான்).

ராஜ :—இருவருக்கும் ரத்த காயமாகி விட்டது அவர்களைப்பிரித்து விடுங்கள்! (ஹரிராஜவின் இருவரையும் பிரித்துவிடுகிறான்).

ஹேமசந் :—பாதகமில்லை, இன்னும் வேண்டுமானாலும் விளையாடுவோம்.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(59-வது பக்கத்தொடர்ச்சி.)

### 20-வது அதிகாரம்.

கிஷ்ணசாஸ்திரிகள்பெண் இறந்து கொஞ்ச காலத்திற்கெல்லாம் காமேசுவரய்யர் ராமச் சந்திரனுக்கு இரண்டாம் கலியாணம் செய்ய பிரயத்தினம் செய்தார். இராமச்சந்திரன் தனக்கு எப். ஏ. பரிக்ஷைதேறுமல் கலியாணம் செய்துகொள்ளுகிறதில்லை என்றுன். மன தில் அவனுக்கு பெண்சாதி இறந்து அவ் வளவு சீக்கிரத்தில் மறுகலியாணம் செய்யப் பிரியம் இல்லை. ஆனல் அவனுக்கு வயது பதினெட்டு ஆதலால் பெண்ணைக்கொடுப்ப வர்கள் எனக்கு உனக்கு என்று மேல்விழுந் தார்கள். கடைசியில் காமேசுவரய்யர் அவனை க்கலியாணம் செய்துகொள்ளவேண்டியது தானென்று கட்டாயப்படுத்தினர். பிறகு அவன் காமேசுவரய்யர் பிடிவாதக்காரர் ஆனபடியால் அவர் மனம் கோணக்கூடாது என்று கண்டு கலியாணம் செய்துகொள்ள சம்மதித்தான். பிறகு காமேசுவரய்யர் பெண் நல்ல பெண்ணுயும் சம்பந்தம் நல்ல சம்பந்த மாயும் பார்க்கவேணுமென்று யோஜித்து. கேட்டவர்களுக்கெல்லாம் பிடிகொடுக்காமல் ஒவ்வொருவரையும்பற்றி தனியாக விசா ரித்துக் கொண்டிருந்தார். ஒரு சப்ஜட்ஜி தன் பெண்ணைக் கொடுப்பதாகக் கேட்டார். ஆனல் அவர்கள் சாராயம்குடிக்கிறவர்க ளென்று சிலர் சொன்னர்கள். சிலர் அவர் சுருட்டுக் குடிக்கிறதுண்டு என்றுசொன்னர் கள். காமேசுவரய்யர்எனக்கு வடதேசத்து வடமனுய் ஆசாரசீலனுய் அன்னபானுதி களுக்கு யோக்கியமாயுள்ள வீடாகவேண்டு மே யல்லது காசுவேண்டாம் அவன் குபேர னுயிருந்தாலும் குடிகாரனுயிருந்தால் என க்கு வேண்டாமென்று சொன்னர். ஒரு டிப்டி கலெக்டர் பெண்ணைக்கொடுக்கிறே னென்றுர். அவர் சோழதேசத்து வடமனெ ன்றுர்கள். காமேசுவரய்யர் அதுவும்வேண்டா மென்று சொல்லிவிட்டார். இப்படிக்கிருக்க கோயம்புத்தூர்ஜில்லா பூலாவடி கிராமத்தில் சுப்பராமய்யர்என்று ஒரு தனவானுக்கு இர ண்டுபெண்கள் இரண்டு பிள்ளைகளென்றும், அவர் பெண்கள் இரண்டும் வெகு அழகு என்றும் புத்திசாலிகளென்றும் அவர்கள் இருவரும் இங்கிலீஷ்கூட மெட்ரிகுலேஷன் வரையில் படித்திருப்பதாகவும் பாட்டு பிடில் வைத்துக்கொண்டு பிடிலின்சப்தத்துக்கு தகு ந்தாப்போல் வெகுநன்றுய் பாடுவர்களென்று ம் ஒருவர் காமேசுவரய்யரிடம் வந்து சொன் னர். உடனே காமேசுவரய்யர் அந்தப்பெண் ணைத் தான் நேரில் பார்க்கவேண்டுமென்று புறப்பட்டுபோனர். காமேசுவரய்யரைக் கண் டதும் அவ்வீட்டில் அந்த தனவான் அவரை வெகு மரியாதையாக உபசரித்து பெண்ணைக் கூப்பிட்டுப் பாடச்சொன்னர். அந்த தனவா னுடைய பெரியபெண் சிகப்பாயும் வெகு அழ காயும் வயது பத்துள்ளதாயும் இருந்தது. சி ன்னப்பெண் கொஞ்சம் கறுப்பாயிருந்தபோ திலும் அதுவும் வெகு அழகாயிருந்தது. கா மேசுவரய்யருக்கு பெண்ணின்பாட்டுகளையும் படிப்பையும் கேட்கும்பொழுது இவளை ந மது இராமச்சந்திரனுக்கு கட்டாயம் கலியா ணம் செய்துவைக்கவேணுமென்று தீர்மானி தார். பிறகு ஓர் ஜோஸியரை வரவழைத்துஜா தகத்தைபார்த்தார். ஜாதகம் பொருத்தம்வெ குநன்றுய் இருக்கிறதென்று ஜோஸியர் சொ ன்னர். காமேசுவரய்யர் தன்மனதில் கிஷ்ண சாஸ்திரிகள் பெண்ணுக்கும் இந்தஜோஸியப் பசகள் இப்படித்தான வெகுபொருந்திக்கை யாயிருக்கிறது என்றுசொன்னர்கள்; கடைசி யில் கல்லியாணமாகி ஒருமாசம்கூட இருக்க வில்லையென்று நினைத்துக்கொண்டு அந்ததன வானைப்பார்த்து நல்லது சுப்பராமய்யரவா ளே எங்கள்குடும்பத்தில் கலியாணம்செய்கிற தென்றுல் முதலில் ஜாதகம்சரியாய் இருக்க வேண்டும்; பிறகு அதுசரியாக இருந்துவிட் டால் கோயிலில் புஷ்பம் வைத்துப்பார்க்கவே ண்டும்; அதில் வெள்ளைபுஷ்பம் அகப்பட்டு விட்டால் கலியாணம் நிச்சயந்தான் என்றுர். சுப்பராமய்யர் அதற்கு சம்மதித்து கோயிலு க்கு காமேசுவரய்யரை கூட்டிப்போய் அவரை யே புஷ்பம் கட்டிவைக்கச் சொன்னர், புஷ் பம் வைத்துப்பார்த்ததில் வெள்ளைப்புஷ்பம்

அகப்பட்டதும் தவிர அப்போது அகஸ்மாத்தாகபக்கத்து வீடொன்றில் ஒருமணிசப்தம் கேட்டது. காமேசுவரய்யருக்கு வெகு சந்தோஷம். சுப்பராமய்யரவாளே ஓங்கள் மூத்த பெண்எங்காத்துநாட்டுப்பெண்தான் என்றார். காமேசுவரய்யர், சுப்பராமய்யரும் வெகு சந்தோஷப்பட்டுக்கொண்டு நான் உங்களுக்கு முன்னமேயே, தீர்மானம் செய்துவிட்டேனே என்றுசொல்லி காமேசுவரய்யருக்கு ஓர்பெரியவிருந்துபோட்டு அவருக்கு உயர்ந்தவேஷ்டி ஒரு ஜோடியும் காமேசுவரய்யர் கூடவந்தயெல்லாருக்கும் வேஷ்டிகளும் கொடுத்தனுப்பினர். காமேசுவரய்யர் உடனே ஊருக்குப்போய்தன் வீட்டில் யோஜித்துக் கொண்டு கலியாணத்துக்கு முகூர்த்தத்தையும் பார்த்து சொல்லி அனுப்பினர். பிறகு சுப்பராமய்யர் லக்கினபத்திரிகையும் சீர்வசைகளையும் ஏராளமாய் அனுப்பினர். காமேசுவரய்யர் எப்போதும் வழக்கம்போல ராமச்சந்திரன் இரண்டாம் கலியாணத்திற்கும் இரண்டாயிரம் ரூபாய் கடன் வாங்கினர் முன்கலியாணம் போலவே ஊரில் ஒருவரையாவது விட்டுப்போக வில்லை. ஊர்முழுவதும் கூட்டிக்கொண்டு வெகு ஆடம்பரமாய்போனர் இராமசந்திரன் இரண்டாம்கலியாணத்தை நாம் அதிகமாக வர்ணிக்க வேண்டியதில்லை. சுப்பராமய்யர் நிரம்பவும் புத்திமானுனதால் யெல்லாருக்கும் திருப்தியாகும்படி கலியாணத்தைநடத்தினர். மாப்பிள்ளைக்கு அதிருப்தியில்லாமல் சீர்வரிசைகளை, ஏராளமாகக் கொடுத்தார். நகைகள்ஒன்றும் பாக்கி யில்லாமல் செய்தார். வைதீகர்களுக்கும் அவர்கள் ஸ்தோத்ரம் பண்ணும்படி நல்ல தக்ஷிணை கொடுத்தார். பாட்டுக்கச்சேரி சதிர் இதுகளெல்லாம் உபாயமாய் தெரிவித்தாரேயொழிய அதுகளில் அதிகமாக பணம்செலவிடவில்லை. ஏழை பணக்காரன்என்கிற வித்தியாசம் அவர்கலியாணத்தில் இல்லை. சம்பந்திகள் கூடவந்தவர்களையும் ஒருவரையாவது குறைவாகவிடவில்லை. எல்லாருக்கும் வேஷ்டி புடவைவாங்கிக்கொடுத்தார். இராமச்சந்திரனுக்கு நடந்த உபசாரத்தைநான்சொல்ல வேண்டியதில்லை. இராமச்சந்திரனுக்கு இந்தக்கலியாணத்தில்வெகு சந்தோஷம். அவள்நலங்கு இடுவதும் ஊஞ்சல் ஆடுவதும் வெகுநேத்ரோத்ஸவமாயிருந்தது. இராமசந்திரன் பெண்சாதிக்கு சீதா என்றுபெயர், சீதா பாடவும் இராமச்சந்திரன் ஒவ்வொரு பாட்டுக்கும் பதில் எதிர்பாட்டுப்பாடவும் எல்லாரும் கேட்டு சந்தோஷப்பட்டார்கள். இராமச்சந்திரனுக்கு கலியாணகாலத்தில் தன் சிநேகிதர்களைத்தவிர தோழிகள்கூட சிலர் ஏற்பட்டார்கள். சிறுகுட்டிகளெல்லாம் இராமச்சந்திரனைச்சுற்றிக்கொண்டே இருந்தார்கள். அவர்களில்ஒருத்தி நலங்குக்கு முந்தி இராமச்சந்திரனை ஊன்பொண்டாட்டியின்பெயரைச் சொல்லிகூப்பிட்டால் தான்அவள்நலங்குக்கு வருவாள் என்பாள். இராமசந்திரனுக்கு இதெல்லாம் வெகு பிரியம், அவன் மெட்ரிகுலேஷன் பரிக்ஷைதேறி இருந்தபடியால் வெள்ளைக்காரர் வழக்கம்தான் சிலாக்கியமென்றும் பெண்சாதிகளோடு சிநேகிதர்கள் போல் புருஷர்கள் இருக்கவேண்டு மென்றும் ஆகையால் பெண்கள் பெண்டாட்டியை அழைக்கவேண்டும் என்றபோது இவன் அதற்குத்தடைஎன்ன என்றுபோய் "சீதா போகலாம்வா" என்று கூப்பிடுவான். எல்லா குட்டிகளும்அதைக்கண்டு பெண்டாட்டியோடு பேசினன் பேசினனென்று சிரிப்பார்கள். சாப்பிடும்போது ஒரு குட்டி மெள்ளவந்து சீதாவின் இலையில் இருக்கும் பக்ஷணத்தை யெடுத்து இராமச்சந்திரன் இலையில்போடுவாள் அதற்கும் இராமச்சந்திரன் அஞ்சாமல் எச்சலைசாப்பிட்டால் என்ன? பெண்டாட்டி எச்சில்தானே! என்பான். இது குட்டிகளுக்கெல்லாம்ஒருவேடிக்கை. இப்படிஇராமச்சந்திரன்குட்டிகள் சொன்னபடி யெல்லாம் செய்து அவர்களைத்திருப்தி செய்வதுபோல் தன்மனதையும் திருப்தி செய்துகொண்டான். கலியாணத்தின் மூன்றுநாள் ஒருபெண் வந்து வேண்டுமென்றே ஒரு கடிதத்தை இராமச்சந்திரனிடம்கொடுத்து "இந்தா உன் பெண்டாட்டி கடிதம் எழுதச்சொன்னள்". என்றாள், இராமசந்திரனும் தன் பெண்சாதி புத்தியை சோதிக்கும் பொருட்டுஅவளுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினன். அப்பெண்அக்கடிதத்தை சீதாவிடம் கொடுக்கவும் சீதா யோஜித்துப்பார்த்து நல்ல புத்திசாலி யானதால் அக்கடிதத்திலேயே ஒருபுரத்தில் என் கடிதத்துக்கு நானேபதில்எழுதிக்கொள்வது நியாயமா என்று எழுதி அப்பெண்ணிடமே கொடுத்து அனுப்பினள். இராமசந்திரன் இதைப்பார்த்து அவள் கடிதம் எழுத சந்தோஜப்பட்டதற்கும் எழுதாமலிருப்பதற்கு

புருஷன் கோபிக்காமலிருக்கும்படி பதில் அனுப்பினதற்கும் இதுகளையெல்லாம்நினைத்து நினைத்து சந்தோஷம் அடைந்தான். கடைசியில் கல்யாணம்முடிந்தது. இராமச்சந்திரன் உடனே படிப்பதற்கு திருச்சினாப்பள்ளிக்கு போய் விட்டான். இராமச்சந்திரன் கலியாணத்தில் எல்லோரும் வெகுதிருப்திஅடைந்தார்கள். ஆனால் இதில் திருப்திஅடையாதவள் தங்கை ஒருவளே. இவளுக்கு அதில் தன் அருமையினால் அந்தக்கல்யாணம்ஒன்றும் பிடிக்கவில்லை. மேலும் தனக்கு இந்தகலியாணத்தில் காமேஸ்வரய்யர் ஒரு காசிப்பட்டும் தன் குமாரனுக்கு ஒருகாசிப்பட்டும் வாங்கித்தரவில்லை என்கிற மனஸ்தாபம். பிறகு எல்லாரும் பூவரசநல்லூர்போய்ச்சேர்ந்தார்கள். தங்களுக்கு இந்த குடும்பம் ஒன்றாய் இருந்து இராமச்சந்திரன் அதிர்ஷ்டம் மேலும் மேலும் அதிகமாவது மனசுக்கு பிடிக்கவில்லை இதற்கு என்ன உபாயம் செய்யலாமென்று பார்த்தாள் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியிடம் அடிக்கடி யோஜித்தாள். அவர் இன்னும் கொஞ்ச காலம் பொரு சமயம் வரட்டும் பேசிக்கொள்வோமென்று சொல்லி வைத்திருந்தார். கொஞ்ச காலத்திற்கு பிறகு இராமச்சந்திரன் எப். ஏ. பரிக்ஷைக்குப்போயிருந்து ஊர்வந்து சேர்ந்தான். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளும் பி. ஏ. பரிக்ஷைக்குப்போயிருந்து ஊர்வந்துசேர்ந்தார். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் இதற்குமுன் இப்படி நாலுவருஷம் பி. ஏ. பரிக்ஷைக்குப்போயிருந்து பரிக்ஷை தேறவில்லை, இராமச்சந்திரன் பெண்சாதி கலியாணமான ஒருவருஷத்திற்கெல்லாம் ருதுவானதாக கடிதம்வந்தது. காமேசுவரய்யர் எல்லோரும் புறப்பட்டு பூலாவடிக்குப்போனார்கள். இராமச்சந்திரன்மட்டும்போகவில்லை. ஏனென்றால் அவருக்கு பெண்ணின் வீட்டிற்குப்போனால் தன்னைபற்றி அபஸ்மாரமாக பாடுவார்களென்று தெரிந்ததால் போகமனம் வரவில்லை. நமசகுள் திரண்ட வீடுகளில் பெண்பெண்டாட்டிகள் கெட்ட பாட்டுகளை எல்லாம் உருப்போட்டுக்கொண்டு அதுகளைப்புருஷர்கள்முன் வெட்கம் இல்லாமல்சொலவது மிகவும் வழக்கமாயிருக்கிறதை இராமச்சந்திரன் தடுக்கமுயன்றும் பயன்படவில்லை. இராமச்சந்திரன் கர்னடகமாப்பிள்ளையாக இருக்கவில்லை. கலியாணம் ஆனபிறகு ஒருதரம் காமேசுவரய்யருக்கு தெரியாமல் பூலாவடிக்குப்போயிருந்தான். அந்தசமயத்தில் தன்மாமியாருடன் சொல்லி சீதாதன்னுடன் பேசவேண்டுமென்று இராமச்சந்திரன் ஏற்பாடுசெய்தான். சீதா வெகுபுத்திசாலியானதால் ஒருவரும் இல்லாதசமயத்தில் மெள்ள இராமச்சந்திரனைக்கண்டுதான் அவனுடன் பேசுவது ஒருவருக்கும் தெரியகூடாதென்றும் ஒருவரும்இல்லாதசமயம்பார்த்து தன்னுடன்பேச வரவேணுமென்றும் வேண்டிக்கொண்டாள். இராமச்சந்திரன் அப்படியே சம்மதித்தான். பிறகு ஊருக்குப்போகும்போது அடிக்கடி கடிதம் எழுதவேண்டுமென்று சொல்லிவிட்டுப்போனான். சீதா ஒவ்வொரு கடிதமும் இராமச்சந்திரனுக்கு இங்கிலீஷில் தான் எழுதவாள் இராமச்சந்திரனும் அவளுக்குபதில் இங்கிலீஷில்தான் எழுதுவான். சீதா எப்போதும் இங்கிலீஷ்புஸ்தகம் பார்த்துக்கொண்டிருந்தபடியால் இங்கிலீஷில் பி. ஏ. பாஸ்செய்தவர்களுக்குசமானமாய் எழுதுவாள். காமேசுவரய்யர் இராமச்சந்திரனுக்கு சீக்கிரம் சாந்திமுகூர்த்தம் லீவிலியே செய்துவிடவேணுமென்றுசொல்லி அனுப்பினர். சுப்பராமய்யர் அப்படியேசம்மதித்து சாந்திமுகூர்த்தத்துக்கு தகுந்த சீர்வரிசைகளை செய்து பெண்ணை புக்காத்தில் கொண்டுவந்துவிட்டார். சீதா சாந்திமுகூர்த்தத்துக்கு முன்னேயே இராமச்சந்திரனுக்கு சாந்திமுகூர்த்தம் நடக்கிறதை வெகு வேடிக்கையாய் எழுதி அவனுக்கு பிரியமான சாமான்களை விபரமாகவெழுதச்சொன்னாள் இராமச்சந்திரன் பதிலைப்பெற்றுக்கொண்டு சீதா அதுகளை ஒன்றும் காண்பித்துக்கொள்ளாமல் தன்தகப்பனரிடம்சொல்லி ஒரு ஹால்நிறைய குரிச்சி ஸோபா ஸ்பிரிங் வைத்தகட்டில் பெரியநிலைக்கண்ணாடி ஒரு ஜோடி இரவிர்வமாவின் பெரியபடங்கள் எல்லாம் வாங்கி வறச்சொன்னாள். இராமச்சந்திரனுக்கு தன்வீட்டில் இதற்காக ஒருஹால் கட்டச்சொன்னாள் இராமச்சந்திரனும் காமேசுவரய்யருக்குச் சொல்லிஅப்படியே ஏற்பாடு செய்து ஒரு அலங்காரமான பெங்களாவும் செய்ய ஏற்பாடுசெய்தான் சீதா படுக்குள்ளில் விடப்பட்டதும் தங்கத்தைப்போல்கட்டிலின் பின்னால் ஒடவில்லை. இராமச்சந்திரனும் ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளைப்போல் ஏமார்ந்து ஒரு பெண்ணையும் உள்ளேவிட வில்லை. சீதா உள்ளேசென்றதும் தானே கதவைத்தாள்போட்டு இராமச்சந்திரனிடம்போய் நமது தேசத்தில் இந்தசாந்தி முகூர்த்தத்தை ஏன் இவ்வ

ளவு பஹிரங்கமாகச் செய்கிறார்கள். இப்படி யெங்களை பப்பிளிக்காக அவமானம் செய்யு நாங்கள் புருஷர்களுக்கு என்ன அபராதம் செய்தோமென்றாள். இராமச்சந்திரன் இது உங்கள் பெண்பெண்டாட்டிகள் ஏற்பாடு அல்லது புருஷர்கள் ஏற்பாடு அல்லவென்றான். பிறகு மற்ற ரகசியங்கள் படுக்குள் ரகசியங்கள் ஆனதால் அவைகளை நான் சொன்னால் இராமச்சந்திரனுக்கு கோபம்வரும். இராமச்சந்திரன் பெண்சாதி படித்தவளாதலால் வீட்டு காரியம் தெரியாதென்று காமேசுவரய்யர் வீட்டுபெண்டுகளின்எண்ணம். ஆனால் சீதா புக்காம் வந்தவுடனே வீட்டில் சாமான்கள் ஒவ்வொன்றையும் வெகுசீராய் வைத்ததையும் காரியங்களெல்லாம் வெகுநேர்த்தியாயும் சிக்கிரமாயும் செய்கிறதையும்பார்த்து அந்தவீட்டிலேயெல்லாரும் சீதாவைக் கொண்டாடினது மன்றி ஊரில்கூட எல்லோரும் பெண் என்றால் இப்படியல்லவா பெண் இருக்கவேண்டும் என்றுசொல்லும்படி நடந்துவந்தாள். நீதிசாஸ்திரத்தில் "காரியேஷுதாஸி கர்ணேஷுமந்திரி ரூபேஷு லக்ஷ்மி க்ஷமயாதரித்தரி ஸ்நேஹேஷுமாதா சயநேஷு வேசி" என்று வர்ணிக்கப்பட்ட பெண் இவள்தான் என்று எல்லாரும் கொண்டாடினார்கள். சீதா தன் தாய்தகப்பனை வெகு சந்தோஷமாய் ஊருக்கு அனுப்பி அவர்களுக்கு அடிக்கடி லெட்டர் போடுவதாக சொன்னாள். தங்கம் காமேசுவரய்யரையும் காமாக்ஷி அம்மாளையும் பார்த்து அழுததுபோல் சீதா அழவில்லை. தங்கம் பிரஸவகாலம் என்று மறுபடியும் சிலநாள் பூவரசநல்லூரிலேயே இருந்தாள். கொஞ்சகாலத்திற்குப் பிறகு தங்கத்திற்கு ஒரு பிள்ளைபிறந்தது. காமேசுவரய்யர் எல்லோரும் இந்த பிள்ளைக்காவது தங்கத்துக்கு நன்றாய் செய்யவேணுமென்று சொல்லி நிரம்பவும் பெருமையாய் வைத்திருந்தாகள். ஆனால் என்ன பெருமையாய் வைத்திருந்தும் தங்கத்துக்குமட்டும் இராமச்சந்திரன் பெருமையை நினைக்கும்போதெல்லாம் ஒன்றும் ஓடவில்லை. வெகு விசாரப்பட்டு கொண்டிருந்தாள் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் புண்ணியாகவாசனத்துக்கு இருந்துவிட்டு மதுரையில் கலெக்ட்டராபீசில் ஒருகுமஸ்தாவேலைக்கு உத்தரவுவந்திருப்பதாய் சொல்லி வேலையை ஒப்புகொள்வதற்காக மதுரைக்குப் புறப்பட்டுப் போனார். தங்கத்தினிடம் அவர் இரண்டு வருஷத்தில் தனக்கு டிப்ட்டிகலெக்டர்வேலை ஆகும் என்று சொன்னபடியால் அவள் எல்லோரிடத்திலும் தன் புருஷனுக்கு டிப்டிகலெக்ட்டர் வேலை வந்துவிட்டது என்றும் ஆனால் இப்போது சம்பளம் இருநூற்றி முப்பத்தைந்து குறைய இருநூற்றி அன்பது ரூபாய் என்றும் சொல்லிக்கொண்டாள் ஒன்றும் அறியாத கிராமஜனங்கள் தங்கத்தின் "ஆம்டையானுக்கு கல்கட்டற" வேலையாய் இருநூற்றி அன்பது ரூபாய் சம்பளமாம்இன்னும் கொஞ்சநாளில் இருநூற்றி முப்பத்தைந்து ரூபாய் ஆகுமென்று சொல்லிகொண்டிருந்தார்கள். இராமச்சந்திரன் பி.ஏக்கு போகும்படிக்கு பட்டணம் போகவேணுமென்றான். கூடவே தன் தாய் பெண்ஜாதியெல்லாரையும் கூட்டிப்போக வேண்டுமென்றான் காமேசுவரய்யருக்கு இதில் சம்மதமில்லை. பட்டணம் போனால் அதிக செலவாகுமென்றும் அதிலும் சம்ஸார சஹிதமாய்போனால் இன்னும் அதிகமான செலவு ஆகுமென்றும் யோஜித்தார். தங்கம் இதுதான் சமயம் என்று கண்டு ஆஷாடபூதி திருவேங்கட்ட இராமசாஸ்திரிகளின் தம்பியான காவாலி சுப்பய்யா என்பவனை தூண்டிவிட்டு காமேசுவரய்யர் மனதைக்கலக்கச்செய்தாள். அவன் காமேசுவரய்யரிடம் வந்து யோகக்ஷேமம் பேசுகிறவன்போல் பேசி கடைசியில் அண்ணா இந்தக்காலத்தில் சிறுபிள்ளைகள் அதிகாரமாகத்தான் இருக்கிறது! மேலும் உங்களை பட்டணம் கூப்பிடட்டுமே! தாயார் பெண்ஜாதி என்று இப்படி கக்ஷி பிரிந்துபோகிறது பாருங்கள் என்றான். தங்கமும் அதற்கு சரியாக ஒத்திருக்கும்படி காமேசுவரய்யரிடம் தனியாப்போய் இராமச்சந்திரன் தாயார்கூட தன்நாட்டுப்பெண்வீட்டுச்கு உழைக்கத்தான் வந்தாளா, நாங்கள் பட்டணம் போய் விடுகிறோம் வீட்டில் இருக்கும் மற்றவர்கள் உழைக்கட்டுமேஎன்று சொன்னதாக சொன்னாள். இப்படி தனியாக நேர்ந்தபோதெல்லாம் தங்கமும் காவாலிசுப்பய்யரும் இராமச்சந்திரனை தூஷித்துகாமேசுவரய்யர் மனதை கெடுத்துவிட்டார்கள். இராமச்சந்திரன்குடும்பசகிதமாய்த்தான் பட்டணம் போவேனென்று பிடிவாதம் செய்தான். காமேசுவரய்யர் மனதில் வருத்தப்பட்டுகொண்டு மேலுக்கு சம்மதிப்பதுபோல் அவர்களை பட்டணம் அனுப்பினார்.

(இன்னும் வரும்.)

## MODERATES *Versus* NATIONLISTS.

# நிதான நவீனக்கக்ஷியார் சண்டை.

### ஸ்வதேசிய-ஸ்வராஜ்ய லக்ஷியங்கள்.

"பழையனகழிதலும் புதியனபுகுதலும் வழுவல வியல்பின் முறையினனே."

"கெடுவான் கேடு நினைப்பான்" என்பது பழமொழி. இதன் கருத்து, என்னவென்றால் ஒருவன் கெட்ட நினைவுகள் நினைக்காமல் அவனுக்குக் கேடுவரமட்டாது. ஏனென்றால் அது என்றும் மாறாததோர் சங்கல்பதர்மம். சங்கல்பமென்றால் நினைவு. மனதால் என்ன நினைக்கிறோமோ அதுவே காரியமாகப் பரிணமித்துத்தோன்றுகிறது. "மனசு" என்பது எப்போதும் நினைப்பும் மறைப்புமே தொழிலாகவுள்ளது. இதையே சங்கல்ப விகற்ப ரூபமானது என்பார்கள். ஒன்றையுள்ளபடி நினைத்தால் நினைத்தது தோன்றும். தோன்றினதெல்லாம் மறையுமாதலால், நினைப்பு என்பது எப்பொழுது உண்டோ, அப்பொழுது மறப்பும் உண்டு என்று ஏற்படுகிறது. மனது மேலே அறிவையும், கீழே விஷயத்தையும் நின்று சங்கல்பிக்கும். அறிவைப்பற்றிநின்று சங்கல்பிக்கும்போது ஸத்வரூப தேஜோ விருத்தியும், விஷயத்தைப்பற்றிநின்று சங்கல்பிக்கும்போது தாமஸரூப இருள்விருத்தியும் உண்டாகும். முதலாவதுவிருத்திக்கு தெய்விகமென்றும், இரண்டாவது விருத்திக்கு இராக்ஷஸமென்றும்பேர். இப்படியுண்டாகும் ஸத்வதமோ விர்த்திக்குத்தக்கபடி நன்மைதீமைகள் உண்டாகும். இதை "மனம்போலிருக்கும் மாங்கல்யம்" என்னும் பழமொழியால் கூறுவார்கள். 'மாங்கல்யம்' என்பது நன்மைதீமை யிரண்டுக்கும் பொதுவானதோர் குறிச்சொல். மனம் எப்படி யிருக்கிறதோ, அதாவது, எப்படி சங்கற்பிக்கிறதோ, அப்படிப்போலிருக்கும் நமக்குண்டாகும் நன்மைதீமைகளும், ஆகையால் எப்போதும் அறிவைப்பற்றிநின்று மனதை சங்கல்பிக்கச்செய்து ஆத்மபுத்தியாம் சுபவாசனையை விர்த்திசெய்யவேண்டும். இதனால் விவேகம் விர்த்தியாகும். மனசு சுத்தப்படும்; அதனால் புத்திதெளியும். விஷயப்பற்றிலுழலும் மனசு இருளடைந்து குழப்பத்துக்கிடமாய் நிற்கும். இதனால் அவிவேகம் என்று சொல்லும் அநாத்மபுத்தி விர்த்தியாகும். விவேகமனசு முன்பின் யோசனை செய்யத்தக்க சூக்ஷ்மபுத்தி யுடையதாகும். அவிவேகமனசு இருளடைந்து முன்பின் யோசனை செய்வதற்குவேண்டிய சூக்ஷ்ம திருஷ்டியற்று கண்டதே காக்ஷிகொண்டதேகோலமென்று இந்திரியவழிப்பட்டுச்சென்று துன்பமாகிற தாபம் தாங்காமல்விஷயவாசனை யென்கிற சேற்றுநீரில் விழுந்துகிடக்கும்.

இப்பொழுது ஸ்வதேச லக்ஷியமும் ஸ்வராஜ்யமும் அதிகமாய் ஜனங்கள் மனதைக் கவர்ந்து வருங்காலத்தில், எல்லாஜனங்களும் இப்பொழுதுள்ள துன்பங்கள் தீர, பார தூர போசனைசெய்து ஒரு அந்தர்-லக்ஷியத்தை மனதிற்கொண்டு அதையே ஸதா தியானம் செய்து வரும் சித்தம்வாய்ந்தவர்களாயிருக்கிறார்கள். இந்த சமயத்தில் நமது ஜனங்களெல்லாரும் மனதிற்கொண்டு தியானம் செய்யத்தக்க அந்தர் லக்ஷியம் எப்படியிருக்கவேண்டுமென்பதை வரையறைந்து பரிஷ்காரமாய்க்குறிப்பிட்டுரைக்க வேண்டியது மனோதர்மத்தையுள்ளபடி யுணர்ந்த விவேகிகளுடைய கடமையாகவிருக்கிறது. இந்த அந்தர்லக்ஷியம்கைகூடி அனுபவத்துக்குவர நாம் அப்பியாசிக்கவேண்டிய சாதனவழிகள் அந்த அந்தர்-லக்ஷியத்தின் தன்மையைப் பொறுத்ததாயிருப்பதால், அதை நன்றாக நிர்ணயம் செய்துகொள்ளவேண்டியது நமது கடமையாக விருக்கிறது. இது சம்பந்தமாக நமது ஜனசிரேஷ்டர்கள் மனப்பொருத்தமின்றி இரண்டுபட்ட மனமுடையவர்களாயிருக்கிறார்கள்.

"நிதானக்கக்ஷியார் என்று சொல்லிக்கொள்ளும் ஒரு சாரார், சொல்கிறபடி ஸ்வதேசிய லக்ஷியம் என்பது இந்தியாவானது இந்தியர்களுடைய க்ஷேமத்திற்காகவே

ஆளப்படவேண்டுமென்பதாயும், அதற்கு இன்றியமையாத சாதனம், ஆங்கிலேயகுடியேற்ற நாடுகளைப்போல் பிரிடிஷ் அதிகாரத்துக்குள்பட்ட ஸ்வராஜ்யம் என்றும், இதற்குமேல் நாம் ஆசைப்படுவது சாத்தியமில்லை என்பதுமாயிருக்கிறது. இந்தக்கக்ஷியில் காசு பணம் செல்வம் சிறப்பு இவைநிறைந்தவர்கள் விசேஷமாக இருக்கிறார்கள். காசு பணம் செல்வம் சிறப்பு இவற்றில் மற்றவர்களைப்போல் நிறைந்தவர்களாகவின்றிப்பெரும்பான்மையும் ஏழைகளாயிருந்தாலும், குணம், மணம், கொள்கை, மதம், ஹிதம் இவற்றாற்சிறந்து ஏழைகள் படும்கஷ்டங்களை நேரில் அனுபவிப்பதால் அக்கஷ்டங்களுக்குண்மையான நிவாரணம் தேடத்தக்கவர்களாயும், தேடவேண்டிய நிர்ப்பந்தத்தையுணர்பவர்களாயுமிருக்கிறவர்கள் "ஆப்நோதிஸ்வாராஜ்பம், ஆப்நோதிமானஸஸ்பதிம்" என்கிற சுருதிவாக்கியத்தில் நம்பிக்கையுள்ளவர்களாய் உண்மையையுணர்ந்து உள்ளபடி யதில் நாட்டம்வைத்து ஸத்யத்துக்குழைக்கிறவர்களுக்குஆகாததொன்றில்லையாதலால் நம் ஸ்வதர்மத்துக்கழிவில்லாதபடி நடக்கக்கூடிய இராஜ்பம் எதுவோ அதுவே நாம் விரும்பத்தக்க ஸ்வராஜ்ப லக்ஷியமாம் என்றும் ஸ்வதேசலக்ஷியத்தை ஜகதம்பிகையின் ஆத்மானுசந்தான ரூபமாக அனுஷ்டித்துவந்தால், நமக்கு வேண்டிய சாதகசாதனங்களெல்லாம், நமதுமனவிருள் நீங்க நீங்கத் தானே தேவியின் கிருபாகடாக்ஷத்தால் அமையுமென்றும், ஆதலால் நாம் அந்தர்-லக்ஷியமாகக்கொள்ளும் ஸ்வாராஜ்பத்துக்கு துவந்தபெந்தரூபமான யாதொரு நிபந்தனையும் நாமாக நினைத்துக்கொண்டு அந்தர்-லக்ஷிபத்தின் பூரணத்துக்குப் பங்கம் வரச்செய்வது சரியல்லவென்றும் சொல்லி, நாம் நினைத்ததே நமக்கு-கைகூடுவது சித்தமாதலால் நம் அந்தர்-லக்ஷியத்திற்குப் பங்கம் வரக்கூடாதென்றுஒரேபிடிவாதமாகவிருக்கிறார்கள். இதையே இன்னொருவிதமாகச் சொல்லப்புகில்: நிதானக்கக்ஷியார், பிரிடிஷ் அதிகாரத்தை துருவமையமாகக் கொண்டு அதைச்சுற்றிவரும் பற்பலகிரகங்களில் இந்தியாவும் ஒன்றாகவிருந்தால் போதுமென்கிறார்கள். புதுக்கக்ஷியாராகிய ஸ்வராஜ்ப-லக்ஷியதீரர்களோவெனில் இப்பாரதபூமி என்றென்றைக்கும் நடுநாயகமாயுள்ள ஞானசூரியனைப்போலிருந்துவிளங்கிவந்திருக்க அதைநாம் நமதுயோக்கியதைக்குறைவால் கேவலம்ஒரு சுற்றுக்கிரகமாகச் செய்வது, நமது ஜாதிக்கும் மதத்துக்கும், நமது தேசத்தின்பூர்வ மஹிமைக்கும், அதிலுள்ள நமது ரிஷிகளுக்கும் சித்தர்களுக்கும் ஒருபெருங்குறையாம். அக்கேடிழைக்க நாம் மனமிசைந்து சம்மதிப்பது நாம் செலுத்தவேண்டிய பிதுர்க்கடன், இருஷிகடன், தேவதைகள்கடன் ஆகியமூவகை ருணங்களையும் குறைவறச் செலுத்தியதாகாதென்று வாதிக்கிறார்கள். நிதானக்கக்ஷியார் காரியவாதிகளாயிருக்கிறார்கள். நவீனக்கக்ஷியாகி காரணவாதிகளாயிருக்கிறார்கள். காரியம்காரணத்தில் லயிப்பது முறையேயன்றி, காரணம் காரியத்தில் லயிப்பதுமுறையல்ல. லயித்தாலும் அது கொள்ளாது. காரியத்துக்குள் காரணமிருப்பது வாஸ்தவமானாலும், அது பிரம்மகீடநியாயமாய், ஸதாகாரியத்தைக்காரணமாக்கவேண்டி, பச்சைப்புழுவைக் குளவி கொட்டுவதுபோல், ஸதாகாரியத்தைக் காரணஸ்வரூபமாக்க வேண்டிதூண்டிக் கொண்டேயிருக்குமேயன்றி அதில் லயித்திராது. ஆகையால் நிதானக்கக்ஷியார், நவீனக்கக்ஷியரால், குளவி பச்சைப்புழுவைக் கொட்டுவது போல் கொட்டப்பட்டு வருவார்கள் என்பது திண்ணம். இது கக்ஷிபலத்தைக்குறித்துநாம் சொல்வதில்லை. அவரவர்கள் பற்றிநிற்கும் தத்துவத்தைக்கொண்டு தத்துவஞானவிளக்கபடி ஸ்வபாவமாக நேரிடக்கூடியதையெடுத்துச்சொல்கிறோம். கக்ஷிப்பிரதிகக்ஷிச் சண்டைமுமுறத்தில் பிரகிருதிதர்மம் இன்னதென்பதை நிதானக்கக்ஷியாரும் மறந்துபோனாலும் அவர்கள் நிதானித் தறியாமையினாலேயே பிரகிருதிதர்மம் மாறிப்போய் விடமாட்டாது. இது ஸத்யம், ஸத்யம், முக்காலும் ஸத்யம்.

ஓம் தத் ஸத்.

EXTRACT.

## THE POWER OF THOUGHT,

### மனோசங்கற்பங்கள்.

நம்மில் அநேகருக்கு சங்கற்பங்கள் சிலபாகம் அறிவையூன்றியதாயும் சிலபாகம் விஷய இச்சைகளை ஊன்றியதாயுமிருக்கின்றன. அறிவால் மானசிகசரீரமும் விஷய இச்சைகளால் புவர்லோக சரீரமென்ற காமசரீரமும் அமைகிறது. பிரபஞ்சிகவிஷய இச்சையுள்ளவனுக்கு தெய்வபக்தி யுள்ளவன் மனதின்கண் ஜனிக்கும் பக்தியும் நாட்டமும் ஜனிப்பதில்லை. அவனுக்கு அது ஸம்பந்தமாய் என்னவோதினும் "செவிடன்காதில் ஊதிய சங்குபோல்" ஏற்காது. விழலுக்கிறைத்த ஜலம்போலாகும். இவ்விதமே சிலருக்கு அசங்கியமான எண்ணங்கள் ஏற்பதில்லை. சிலருக்குச் சாமான்யமான கீழ்த்தரப்படிப்பு எத்தனை விதந்தான் சொல்லிக்கொடுக்கினும் போதமாவதில்லை. சிலருக்கோ அபாரவித்தைகூட ஒருதரம் சொன்னமாத்திரத்தில் போதமாகிறது. ஆகையால் வித்தை கற்பித்தல் அந்த வாஸனையை அடைந்துள்ள அதிகாரிகளுக்குப் போதமாகுமே ஒழிய மற்றவர்களுக்கு என்னபோதிக்கினும் ஆகவேயட்டாது. இதற்குக்காரணம்: நாம் ஒரு மேஜையின்பேரில் ஒரே தன்மையான இரண்டு கிண்ணங்கள் வைத்து அவற்றில் ஒரு கிண்ணத்தைத் தட்டி நாதங்கிளம்பியதும் தட்டிய கிண்ணத்தை மீளவும் பிடித்துக்கொண்டாலும்கூட அதற்கு அநுஸரணையாகவுள்ள மற்றொருகிண்ணம் அதே நாதத்தைக் கிரஹித்துப் பிரதி ஒலிக்கும். இதுபோலவே சங்கற்பங்களும் அவைகளுக்கு ஈடாகவுள்ள ஸங்கற்பங்களைக் கிளப்பிவிடுமே ஒழிய ஒத்திராத சங்கற்பங்களைக் கிளப்பமாட்டாது. ஒருவனுடைய சங்கற்பரூபம் இதரரை எவ்விதம் சலிக்கப்பண்ணுமென்ற சங்கை சிலபேர்களுக்கு உண்டாகலாம். ஏற்கனவே ஸொர்க்கங்களுக்கும் கோசங்களுக்கும் பரஸ்பர ஸம்பந்தமுண்டென்பதைத் தெரிவித்திருக்கிறேன்.

எவ்வாறு ஒரேதடாகத்தில் அமைந்துள்ள பலகிணறுகளில் தடாகஜலமும் கிணறுகளின் ஜலமும் ஏகமாய் ஒத்திருக்கும் சமயத்தில் அக்கிணறுகளில்ஒன்றில் ஒரு கல்லைப்போட்டால் எவ்வாறு அக்குறிப்பிட்ட கிணற்றின் ஜலம் சலித்துஅச்சலனம் அதை ஒட்டியுள்ள தடாகஜலத்தை சலிப்பிவித்து அவ்வாறாக மற்றயாவற்றுகிணறுகளின் ஜலமும்சலிப்பது போலும். இப்பொழுது நவீனமாய்க் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் கம்பியில்லாத தந்தி விஷயத்தில் ஆகாசதத்துவத்தால் செய்யப்பட்டுள்ள பல தந்தியந்திரங்களைப் பலவிடங்களில் வைத்து அதில் ஏதேனும் ஒரு யந்திரத்தைச் சலிப்பிக்கவே அச்சலனம் உடனே எங்கும் வியாபித்துள்ள ஆகாச தத்துவத்தைச் சலிப்பித்து எங்குமுள்ள அந்த ஆகாசதத்துவம் சலிப்பதின்மூலமாய் பல விடங்களில் வைக்கப்பட்டுள்ள இதர யந்திரங்கள் எவ்வாறு சலித்து சமாசாரங்களைத் தந்திமரம், தந்திக்கம்பி இவைகளின் உதவியன்றி தெரிவிக்கின்றனவோ இவைகள் போலவே ஒரு ஜீவனுடைய சூக்ஷ்மசரீரம் சலித்ததும், அந்தச்சலனம் அச்சரீரத்தை அநுசரித்துள்ள அந்தச் சூக்ஷ்ம லோகமுழுமையும் சலித்தும், தத்துவாரா அந்தலோகத்திலேயே சகலஜீவர்களின் அவ்வித சூக்ஷ்மசரீரங்களும் சம்மந்தப்பட்டு நிற்பதால் அவ்விதசலனத்திற்குப் பதில் விடையளிக்கக்கூடிய ஒத்தசரீரங்களெல்லாம் அதற்குதக்கவாறு சலிக்கிறது. அப்பால் காந்தம் ஊசியை இழுப்பதுபோலும், பக்ஷிஜாதிகளும், மிருகஜாதிகளும் கத்துமானால் எவ்வாறு அந்தந்த இனங்கள் வந்து. அந்தந்த இனத்துடன் சேர்ந்துகொள்கின்றனவோ அதைப்போலவே ஒத்த சங்கற்பமுள்ள ரூபங்கள் ஒரேராசிகளாகச் சேர்ந்து பலப்பட்டு ஸங்கற்பங்களுக்குத் தக்கவாறு அந்த ராசிக் கூட்டங்கள் தேசத்திற்கு க்ஷேமத்தையோ அல்லது கேட்டையோ விளைவிக்கின்றன. இவ்விதமாக சூக்ஷ்மலோகங்களில் ஸங்கற்பரூபராசிக்கூட்டங்கள் சேர்ந்து பலப்பட்டு சூக்ஷ்மமாக நன்மையோ அல்லது தீமையோ செய்துவருவதுபோல் அவ்வாறு ஸங்கற்பித்த ஜீவர்கள் ஸ்தூலப்பிரபஞ்சத்திலும் பலகாரணங்களை முன்னிட்டுச் சேர்ந்து கூட்டங்கூடி பிரத்தியக்ஷமாக சுகத்தையோ அல்லது கேட்டையோ விளைவிக்கிறார்கள்.

ஆகையால் நாம் ஸங்கற்பங்களின் பலவித சக்திகளினுடையவும் அவைகளின் ஸ்வரூபங்களுடையவும் யோக்கியதையை உணரக்

கூடுமானால் மர்நவஸீகமாகக் குடும்பத்திற்கோ, சங்கத்திற்கோ அல்லது தேசத்திற்கோ எவ்வளவோ உதவிபுரியக்கூடும். நாம் நமது தவறுதல்களைப்பற்றி எவ்வளவு கவலை எடுத்துக்கொள்கிறோமோ அதுபோலவே குடும்பம், சங்கம், தேசம் இவைகளின் தவறுதல்களைப்பற்றிக் கவலை எடுத்தால்தான் சுகமுண்டு. அவ்வித குடும்பம், சங்கம், தேசம் இவைகளுக்கு இதர துர்ச்சங்கற்ப வியாப்திகள் வந்து அணுகி அதிலுள்ளவர்களுக்கு அவைகள் ஜனிக்கவொட்டாமல் அவர்களுக்கு ரக்ஷககவசமாக அவர்களைச் சுற்றிலும் பரிசுத்தமான வியாப்திகள் இருக்கக்கூடிய நிலைமையில் நாம் நமது ஹிதமான சங்கற்பங்களை பிரயோகிக்கலாம். விஷயங்கள் இவ்வாறு இருக்கிறபடியால் வாக்கு,காயங்களால் செய்யப்படும் கர்மங்களுக்கு மனமே முக்கிய ஆதாரமாக இருக்கிறபடியால் கர்மங்களின் உத்தரவாதங்களைத் தெளிய உணர்ந்து பரிசுத்த சங்கற்பங்களையே பிரயோகித்தல் வேண்டும்.

தினப்பிரதி சிறிது நேரம் தனது இஷ்ட தேவதையை ஸ்மரித்து ஸாவதானமாய் அதையே தியானித்து வருவதால் மனத்தின் அழுக்குள் நீங்கும். ரூபதியானமன்றியில் அரூபத்தியானம் கிட்டாது. எவ்வித இஷ்ட தேவதையை த்தியானத்திற்கு அமைத்துக்கொண்டாலும் குற்றமில்லை. ஆனால் அந்த தேவதையானது ஸாத்விக அம்சம் பொருந்திய தேவதையாகமட்டுமிருக்கவேண்டியது, இவ்வாறு தியானித்து வர காலக்கிரமத்தில் மனத்தின்கண் உள்ள அழுக்குகள் நீங்கி ஈசுவரதேஜஸ் ஜாஸ்திபிரவேசிப்பதால் அழுக்குகளாகிற பந்தத்தில்மூடப்பட்டிருக்கிற ஜீவன் தனதுஇனமாகிய பரமாத்பாவையுடையவன்.

மனோ சங்கற்பங்களுக்கு இனி ஒரு தர்மம் உளது:—

வியாதியை உண்டுபண்ணவும் குணப்படுத்தவும் கூடிய சக்தி அதற்குண்டு. இக்காலத்தில் கூட சில டாக்டர்கள் திரவியம் ஸம்பாதித்தலை உத்தேசித்து ஆரோக்கிய ஸ்திதியிலுள்ள தக்க கனவான்களிடம் சென்று அதிக ஸ்நேகபாவத்தைக் காண்பித்து அவர்களின் க்ஷேமத்தைக் கருதியவர்கள்போல் நடித்து அவர்களுடன் வார்த்தையாடிக் கொண்டிருக்கும்பொழுது அவர்களிடம் இல்லாததாகிய ஒருரோகம் அவர்களுக்கிருப்பதாக அறிவிப்பதுவும் அதை ஊர்ஜிதம் செய்யும்பொருட்டு தங்கள் கைவசமுள்ளவர்களில் சிலரை அக்கனவான்களைப்பற்பல சமயங்களில் சந்திக்கச்செய்து தாம் உரைத்தபடி உரைக்கச் செய்வித்து உறுதிப்படுத்துவதும் வழக்கம் இருந்துவருகிறதாகவும் தெரிய வருகிறது. டாக்டர் சொல்லியதை யனுசரித்து இன்னும் பலர்களும் சொல்லவே அக்கனவான்கள் அவ்வித வார்த்தைகளை நம்பித் தங்களுக்கு ரோகமிருப்பதாகவே ஸ்மரித்துக் கவலைப்படத் துவக்கிவிடுவார்கள். ஸ்மரணைபலப்பட பலப்பட நிச்சயமாகவே ரோகமும் நேர்ந்துவிடும். அப்பால் ஸ்மயத்தை எதிர்பார்த்திருந்து மேற்படிபோலி டாக்டர்கள் வந்து அவர்களிடம் வேண்டியமட்டும் திரவியத்தைப்பெற்று சிகித்ஸைசெய்வார்கள். வெளிவேஷத்திற்கு மாத்திரம் பிரமாதமான மருந்துகளெல்லாம் கொடுப்பதாக அபிநயிப்பார்களே ஒழிய விஷயம் வேறு விதமாக விருக்கும். அதாவது தலைப்பில் வியாதியை உண்டுபண்ணுவதற்கு எடுத்த தந்திரத்தையே இதற்கும் அதற்கு எதிரிடை வார்த்தைகளால் தைரியம் சொல்லி வந்து வியாதியைக் குணப்படுத்துவார்கள். வியாதிஸ்தனாயிருப்பவன் எவ்விதம் தலைப்பில் வியாதியை மனோஸங்கற்பத்தால் உண்டுபண்ணிக்கொண்டானோ அதுபோலவே இப்பொழுதும் மனோஸங்கற்பத்தால் நிவர்த்தித்துக் கொள்வான். இவ்வாறு வியாதியை உண்டு பண்ணிக் கொண்டதற்கும் நிவர்த்தித்துக் கொண்டதற்கும் எத்தனையோ அத்தாக்ஷிகள் இருக்கின்றன. அவைகளை எழுதப்புகில்விரியும் மனோஸங்கற்பத்தால் இதரர்களுக்கு நாம் வியாதியைக் குணப்படுத்த வேண்டுமானால் கிரமமான வழியில் மனதைப் பழக்கித் தக்க மனோசக்தியை உடையவர்களாக இருத்தல் வேண்டும்.

இவ்வித மனோசக்தியை அடைய பல வழிகளுள. அவைகளில் ஒன்று, சரீரம் திடமாயும் நோய் முதலியவைகள் ஏதுமின்றி ஆரோக்கியஸ்திதியில் இருப்பதாகச் சரீர ஆரோக்கியத்தைப் பற்றிச் சிலகுறிப்பிட்ட நேரங்களில் தியானித்தல். இவ்வாறு செய்தலால் தன்னைச்சுற்றிலும் ஆரோக்கிய வியாப்தி ஏற்பட்டு அவ்வித பரிசுத்த வியாப்திகள் சரீரத்தில் தாக்கி சுகஸ்திதியை அளிக்கிறது. இக்காலத்தில் கூட மேற்கே அமெரிக்கா முதலிய பலவிடங்களில் (Faith Cure) நம்பிக்கை சிகிச்சை என்ற விஷயத்தில் உறுதியுள்ள ஒருவகை சங்கத்தார் எந்த வியாதி நேரிட்டாலும் மருந்து அருந்தவதில்லையென்றும் நம்பிக்கை

யாலே வியாதியைத் தீர்த்துக்கொள்ளுகிறதென்றும் உறுதியாகச் சங்கற்பித்து அவ்வாறே பிடிவாதமாய்த்தங்களனுஷ்டானத்தை நிறைவேற்றி வருகிறார்கள். மருந்துகளை அருந்தி வியாதிகளைத் தீர்த்துக்கொள்பவர்களின் ஸங்கியைவிட இவர்கள் ஸங்கியை தமாஷாவுக்கு மேற்பட்டே இருக்கிறதாகவும் தெரியவகிறது.

இன்னும் இதைவிட வேறொரு முக்கியவழியுண்டு. அதாவது தங்களுடைய சரீர ஆரோக்கியம் வியாதி இவைகளைக் கிஞ்சித்தேனும் ஸ்மரியாமலே வேறு உத்தமவழியாகத் தியானிக்கவேண்டும். எவ்வாறெனின்? நான் ஈசுவரனுடைய அம்சம்; நான் புருஷன்; எனக்கு எவ்வித கஷ்டமுமில்லை கஷ்டங்களெல்லாம்கூடி பிரகிருதி ஸம்பந்தமாகிய தேகேந்திரியாதிகளுக்கே ஒழிய அதற்கு அன்னியனாகிய எனக்கில்லை!! உண்மையில் ஆன்மா திடமாயும் பரிசுத்தமாயும் ஆரோக்கியமாயுமிருக்கிறது!! என்று தியானிக்கத்தகும்.

இதன்றி வேறொரு மார்க்கமுமுளது. அதாவது' ஆன்மா ஸ்திரமுளது.ஒன்றினலும் அசைக்கமுடியாது. சரீரமும் சரீர சம்பந்தப்பட்ட மற்றெ எல்லா விஷயங்களும் ஸ்திரமில்லாதன. அவை எல்லாம் மாயை என்றும் தியானிக்கத்தகும். ஆனால் இவ்வாறு சொல்லிஇவர்கள் இதன் கருத்தை தப்பாய் கிரஹித்துக்கொண்டு நித்திபகடமைகளைச் செய்யாது தவறிவிடுகிறார்கள். ஆன்மாவைத்தவிர மற்றெல்லாம் அநித்தியமென்பதற்கு ஐயமில்லை. ஆயினும் தற்காலத்தில் நம்மில் பெரும்பாலர்களுக்கு தங்களது பிரக்ஞையை வெளிப்படுத்த ஸ்தூல உபகரணத்தைத்தவிர வேறு சூக்ஷ்ம உபகரணங்களாகிற மனம் முதலிய இந்திரியங்கள் பரிபக்குவமடையவேயில்லை. நமக்கவ்வித யோக்கியதை உண்டாகுமளவும், நமதுஸ்தூல உபகரணங்களுக்குப்பசி, தாகம் முதலிய உபாதைகள் உண்டாவது நீங்குமளவும் நாம் நித்திய கடைமைகளைக் கைவிடப்படாது. பகவான் கீதையில் சொல்லிய பிரகாரம் தேகயாத்திரை நடக்கவேண்டியதை உத்தேசித்தாவது அவசியம் கடமைகளை நடத்தியே தீரவேண்டும். நம்மால் பிறர்களுக்கு எவ்வித உதவியுமளிக்காமல் அவர்களைக்கொண்டு தேகயாத்திரைக்கு வேண்டுபவைகளை அடைவோமானல் நாம் அவர்களுக்கு ருணஸ்தராவோம. மீளவும் அவற்றை இருக்குமளவும் கடன் பாக்கி நம்மேல் நின்று கொண்டேயிருக்கும். எப்பொழுதும் கிரந்தங்களில் சொல்லப்பட்டவைகளை ஸ்தூல பார்வையில் பார்த்துத் தவறுதலாக நடவாமல் அறிவைச்செலுத்திப் பார்த்து இயற்கையான அனுபவ வழியை அறிந்து அதன்படி நடத்தல்வேண்டும். ஆகையால் நாம் கிரமமான காலங்களில் பகிர்முகப்படும் மனதை இழுத்து அந்தர்முகப்படுத்தி தனது ஆன்மஸ்வரூபத்தில் நிம்மதியாக நின்றுகொண்டு மனச்சுத்தியை அடையவும் சமதமாதிகுணங்களை அடையவும் நாம் மனதைப்பழக்கவேண்டும். ஜீவாத்மா விகாஸத்தை அடைந்து பரமாத்மா ஆகவேண்டுவதை உத்தேசித்தே நமது ஜீவன் பால்யாவஸ்தையிலிருக்கும் காலத்தில் அவசியம் சரீரபோஷணையைப்பற்றிக் கவலை எடுக்கவேண்டும். அதற்குத் தக்க கர்மங்களும் செய்தல்வேண்டும். தான் அதுவான பிறகு வேண்டுமானல் அவ்வித கவலையை விட்டொழிக்கலாம். இங்கும் ஒருவார்த்தை சொல்லவேண்டி நேரிடுகிறது. பகவானே இதராள் கெட்டுப்போகாவண்ணம் தனக்கு கர்மத்தினுல் எவ்வித பிரயோஜனமில்லையாயினும் தான் கர்மத்தை அனுஷ்டித்துக் காட்டுவதாக அருளியிருக்கிறார், ஆகையால் ஜனஸமுகத்தில் இருக்குமளவும் அவசியம் கர்மங்களைச் செய்தேதீரவேண்டும். சாதாரண ஜனங்கள் பெரியவனுடைய ஸ்தூல அனுஷ்டானங்களைக் கவனித்து அதைப் பின்பற்றுவார்களே ஒழிய அவனுடைய சூக்ஷ்ம நிலையை இன்னதென அறிந்து அனுஷ்டிக்கமாட்டார்கள் என்பது திண்ணம். இன்னும் மனதிற்கு எத்தனையோ தர்மங்களிருக்கின்றன. மனதைக் கிரமவழிகளில் பழகுவதற்கும் எத்தனையோ மார்க்கங்களுள. அவைகளைப் பலகிரந்தங்கள் மூலமாயும் அனுபவகுருக்களின் மூலமாயும் தெரிந்துகொண்டு அப்பியஸிக்கத் தொடங்குவது குணமாகவிருக்கும்.

ஆகையால் மனதின் கண் ஜனிக்கும் அசுப இச்சாஸங்கற்பங்களைத்தெரிந்து அதற்கு எதிரிடையான சுப இச்சாஸங்கற்பங்களைக்கொண்டு அவைகளை நழுவும்படி செய்து மனதைப் பரிசுத்த நிலைமைக்குக் கொண்டுவந்து ஸமஸ்த ஜீவகோடிகளுக்கும் உதவிபுரிந்து எல்லோருடனும் உத்தமகதியை அடையக்கூடிய பாக்கியத்தை நம்மெல்லோருக்கும் ஜகதீசுவரன் கொடுத்தருள்புரிவாராகவும்.

சுபமஸ்து.

பிரம்மஞானப் பத்திரிகை.